Registered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 34—No. 8



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ ஆவணி 1961 ஆகஸ்ட் | இதழ் 8

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3

தனிப்பிரதி அணா

## சமாஜச் செய்திகள்

21-7-61. இராயப்பேட்டைச் சுந்தரேசுவரர் கோயிலில் சமாஜம் சுந்தரர் திருநட்சத்திர விழாவைக் கொண்டாடியது. திரு. நல். முருகேச முதலியார் அவர்கள் தலைமையில் திருவாளர்கள் - புலவர் முருகவேள், ஜி. கலியாணம் இவர்கள், "சுந்தரர் செந்தமிழ்", "வன்றொண்டர் வாழ்க்கை" என்னும் பொருள்கள்பற்றிப் பேசினார்கள்.

30-7-61. செயற்குழுக் கூட்டம்: பெரும்பாலான சொற்பொழிவாளர்கள் 1962 மே மாதம் மலேயாவில் சமாஜ விழாவுக்கு வரமுடியும் என்று தெரிவித்துள்ளபடியால், 1961-ஆம் ஆண்டு விழாவை டிசம்பரில் பழனியில் நடத்த ஏற்பாடு செய்வதென்றும், மலேயாவில் 1962, மே மாதத்தில் சிறப்பு மாநாடாக நடத்துவதென்றும் தீர்மானிக்கப் பட்டது.

27-8-61. சமாஜச் செயற்குழுக் கூட்டம் மயிலாப்பூர் கிழண்டை மாடவீதியிலுள்ள வணிக வைசிய மண்டபத்தில் காலை 9½ மணிக்கு நடைபெறும். செயற்குழு உறுப்பினர்கள் இதையே அழைப்பாக ஏற்றுக்கொண்டு வரும்படியாகக் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.—ஜி.கலியாணம், செயலாளன்.

75-ஆம் அகவைத் தொடக்கம்: நமது சமாஜத்தின் பழம்பெருந் தலைவர், "சைவப் பெரியார்" திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், 30-7-61 அன்று, தமக்கு எழுபத்தைந்தாம் அகவை தொடங்கப் பெற்றார்கள். அன்று அவர்கள் தமது குடும்பத்தினருடன் திருமயிலைக் கபாலிச்சுரத்தில் இறைவனைச் சிறப்பு முறையில் வழிபட்டு மகிழ்ந்தார்கள். அதன்பின் அன்று நிகழ்ந்த நமது சமாஜச் செயற்குழுக் கூட்டத்திலும் கலந்துகொண்டு மகிழ்வித்தார்கள். அதுபோது சமாஜச் சார்பில் நமது வாழ்த்துக்களைத் தெரிவிக்கும் முறையில், செயலர் - திரு. ஜி. கலியாணம் பிள்ளை, எம்.ஏ., அவர்கள் பாராட்டிப் பேச, மிக இளம்பருவந் தொட்டுச் சைவப் பெரியார் அவர்களின் உணர்ச்சியொத்த அரும்பெறல் நண்பராக விளங்கிவரும் சமாஜத்தின் பழம் பெருஞ் செயற்குழு உறுப்பினர் பெரியார் தாம்பரம் திரு. ச. நடேச முதலியார் அவர்கள், மாலையணிவித்துச் சிறப்பித்துத் தம் வாழ்த்துக்களைத் தெரிவித்தார். சமாஜச் செயற்குழு உறுப்பினர்கள் அனைவரும் "சைவப் பெரியார்" அவர்கள் நீடினிது வாழ்ந்து, மேலும் பல சைவத் தொண்டு

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாளியைஉள் நாடு

மலர் 34 | பிலவ ஆவணி 1961 ஆகஸ்ட் | இதழ் 8

## இலக்கணத்திற் கற்பனைகள்

(முருகவேள்)

தோற்றுவாய்: இந் நிலவுலகின்கண் உள்ள பற்பல நாடுகளிலும் எத்துணையோ பல நூற்றுக் கணக்கான மொழிகள் வழங்கி வருகின்றன. ஆயினும், அவற்றுள் "உயர்தனிச் செம்மொழிகள்" எனக் குறிப்பிடத் தகுந்த சிறப்புடையன ஒருசிலவே யாகும். அவ்வொருசில உயர் தனிச்செம்மொழிகளிலும் கூட, எத்துணையோ பல மொழிகள் வழக்கிழந்து நிற்க, அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ்மொழி யொன்றே, உலகவழக்கு நூல்வழக்கு என்னும் இருதிற வழக்கினும் தொன்றுதொட்டு இன்றுகாறும் நிலைபெற்று நின்று, இளமையாற்றலோடு வளங் குன்றாது இனிது வழங்கி வளர்ந்து வருகின்றது. இங்ஙனம், தமிழுக்கே தனிச் சிறப்பாக உரிய பலவகைப் பெருமைகளுள், அதன் சீரிய இலக்கண அமைப்பும் ஒன்றாகும். அது பற்றியே,

"கன்னி தற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தஇப் பசுந்தமிழ், ஏனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்புஇலா மொழிபோல்
எண்ணி டப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ?"

என ஆசிரியர் பரஞ்சோதி முனிவர், அதன் சீரிய இலக்கண அமைப்புத் திறம் குறித்துப் பாராட்டி யுரைப்பாராயினர்! *தமிழ் மக்களைப்போல இலக்கணத்தினை அன்பும் ஆர்வமும்

---

*"Educated Tamilians have studied Tamil, with an earnestness and assiduity which are highly creditable to

கொண்டு, திட்ப நுட்பம் செறிய, மிகவும் நுணுகிக் கற்றுணர்ந்து இன்புற்றவர்கள் உலகிலேயே வேறு பிறர் இல்லை எனலாம். மொழியின் இலக்கண அமைப்புக்களை நுணுகி நுணுகி ஆராய்ந்து பயின்று வந்ததனால், தமிழர்களின் அறிவு மிகக் கூர்மை யடைந்து வளர்ந்ததுடன், அவர்களுடைய மொழியும் திருத்தமுற்றுச் செம்மை எய்தித் திகழ்வதாயிற்று! இவ்வாறு, தமிழ்மொழியானது திட்ப நுட்பம் செறிந்த சிறந்த இலக்கண அமைப்பினைப் பெற்றிருக்கும் திறம்பற்றியே, தமிழ்க் கவிஞர்களிற் பலரும் தாம் தாம் பாடிய கவிதைகளில் இலக்கண நூற் குறியீடுகளையும் கருத்துக்களையும் விதிகளையும் ஆங்காங்கு ஏற்ற பெற்றி விரவ வைத்துத் தமது சுவைநிறைந்த கற்பனைத் திறனைக் காட்டியுள்ளனர். அவைகளுள் முதன்மையான ஒரு சிலவற்றை மட்டும், இயன்ற அளவு இக்கட்டுரையிற் கண்டு மகிழ்வோம்!

எழுத்துக்கள் : தமிழிலக்கணத்தில் எழுத்துக்களுக்குப் பெயர் அமைத்திருக்கும் முறையே, தமிழ் மக்களின் நுண்மாண் நுழைபுலத்தினை நுனித்துணர்த்த வல்லதாயுள்ளது. *தாமே தனித்து இயங்கவல்ல எழுத்துக்களுக்கு 'உயிர்' என்றும், உயிரோடு கூடியல்லது இயங்கலாற்றாத எழுத்துக்களுக்கு 'மெய்' என்றும், உவம ஆகுபெயராற் காரணம் பற்றிப் பெயர்கள் அமைக்கப்பட்டுள்ளன. தமிழ் மக்களின் தலைசிறந்த தத்துவ ஞானத்தினை இப்பெயர்கள் தகவுற விளக்குகின்றன. தமிழிலக்கணத்துடன் தத்துவக் கருத்துக்களும் விரவி யமைந்திருத்தல் காணலாம். தமிழிலக்கணத்தின் தனிப்பெருஞ் சிறப்பு, அது தத்துவக் கருத்துக்

---

them, and which never have been exceeded in the history of any of the languages of the world. One result of this long-continued devotion to grammatical studies has been the development of much intellectual acuteness; another result has been the progressive refinement of the language itself."
—*Dr. Caldwell*

*"Tamil grammarians designate vowels by a beautiful metaphor, as Uyir or life of a word : consonants as Mey, or the body ; and the junction of a vowel and consonant as Uyirmey, or an animated body." —*Dr. Caldwell*

களுடன் சார்ந்தியைந்து விளங்குதலே யாகும். இந்நுட்ப மெல்லாம் நன்னர் உணர்ந்த சான்றோர் ஒருவர், தமது வழி படு கடவுளாகிய முருகப் பெருமானையே தமிழிலக்கண அமைப்பிற் கண்டு, கற்பனை நயந் தோன்றப் பாடி மகிழ்ந்து இன்புறுத்துகின்றார்!

"கண்ணிகர் மெய்யும், சென்னிக்
கணம்உறழ் இனத்தின் கூறும்,
திண்ணிய புயங்க ளேபோல்
திகழ்தரும் உயிரும், வேறொன்
றெண்ணிடற் கரிய் தாகும்
எஃகமும், இயலிற் காட்டும்
புண்ணிய முனிக்கோன் செவ்வேள்
பொற்பதத் தடிமை தானே."

இப்பாடலின்கண் புலவர் புராணம் பாடிய தண்ட பாணிச் சுவாமிகள் முருகனின் வேலுக்கு இணையாகத் தனிநிலை எனப்படும் ஆய்த எழுத்தைக் குறிப்பிட்டவாறு போல, ஆசிரியர் கச்சியப்பமுனிவர் தாம்பாடிய தணிகைப் புராணத்துள் "ஆய்த வடிவிற் கண் ஒரு மூன்று அவிரும் அண்ணல்" எனச் சிவபிரானின் முக்கண்களுக்கும் ஒப்புமையாக ஆய்த எழுத்தை மொழிந்தருளினமை அறிந்தின்புறற் பாலது.

அகரம்: இவ்வாறே உலகப் பெருங்கவிஞர்களுள் ஒப் பற்றவராகிய திருவள்ளுவர், தமது ஒப்புயர்வற்ற திருக்குறள் நூலின் முதற்கண், "கடவுள் வாழ்த்து"க் கூற முற்படுகின் றார். கடவுளை வாழ்த்துதற்குத் தலைப்படும் முன்னர், உல கிற்குக் கடவுள் ஒருவர் உண்டு என உணர்த்த வேண்டு வது அவருக்கு இன்றியமையாத கடமையாகின்றது. கடவுள் ஒருவர் உண்டு என்னும் உண்மையை உணர்த்த, அவர் வேறு எத்தனையோ பலப்பல வகையான சான்று களையும் காரணங்களையும் எடுத்துக் காட்டி யிருக்கலாம். ஆனால் அவர் அங்ஙன மெல்லாம் செய்யாமல், தமிழிலக் கணக் கருத்தினையே கையாளுகின்றார். ஆசிரியர் தொல் காப்பியர் தாம் இயற்றி யருளிய தொல்காப்பியம் என்னும் தமிழிலக்கண நூலில் "மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" எனப் பணித்தருளிய நுட்பம் உணர்ந்து,

"அகர முதல எழுத்தெல்லாம், ஆதி
பகவன் முதற்றே உலகு."

என்னும் திருக்குறளில், இறைவனுண்மை நிறுவுதற்குத் தமிழிலக்கண அமைப்பினைத் தழுவி, ஆசிரியர் திருவள்ளுவர் அகரத்தினை உவமை காட்டியுள்ள அருமைப்பாடு பெரிதும் போற்றி மகிழ்தற் குரியது! வாழையடி வாழையாகப் பிற்போந்த சான்றோர்கள் அனைவரும், திருவள்ளுவர் கூறிய இவ் அகர வுவமையினைப் பெரிதும் வியந்து புகழ்ந்து, தத்தம் நூல்களிற் பொன்னினும் மணியினும் போற்றிப் பொதிந்து கொண்டு சிறப்பித்துள்ளமை அறிந்தின்புறற் பாலது.

அகர வுவமையின் உள்ளுறைகள்: இங்ஙனம் பிற்போந்த சான்றோர்கள் அனைவரும் போற்றி மகிழும் வண்ணம், இறையுண்மையை நிறுவுதற்குத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் பெருமான் காட்டியருளிய அகர வுவமையானது, சிந்திப்பரியதாய்ச் சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிவதாய், உள்ளுறைகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு ஒளிர்கின்றது! ஆதி அகரம் விகாரத்தானன்றி நாத மாத்திரையான் இயல்பாகத் தோன்றி நிற்கின்றது; அதுபோலவே இறைவனும் இயல்பாகத் திரிபின்றி இயற்கை வடிவினனாகி அமைந்து விளங்குகின்றான். அகரம் அங்காப்பு மாத்திரையால் திரிபின்றித் தோன்றி, வேறு பிற ஒலிகளின் தோற்றங்களுக் கெல்லாம் முதன்மையாய் நிற்கின்றது; அதுபோலத் திரிபின்றி இயல்பாக விளங்கும் இறைவனும் முத்தொழில்களுற்றுத் திரிபுறும் உயிர் உலகுகளின் இயக்கங்களுக்கு முதல்வனாகத் திகழ்கின்றான். அகரமே உயிர்களினும் மெய்களினும் கலந்து நின்று அவற்றை ஒலிப்பிக்கின்றது; அதுபோலவே இறைவனும் அறிவற்ற உலகப் பொருள்களினும் அறிவுடைய உயிர்களினுள்ளும் ஒன்றிக் கலந்துநின்று அவற்றை இயக்குவிக்கின்றான். அகரம் மெய்களினும் உயிர்களினும் ஒன்றிக் கலந்து நிற்பினும், அம்மெய் உயிர்களின் வேறாகத் தனித்தும் நிற்கின்றது; அதுபோல இறைவனும் உலகோடும் உயிர்களோடும் கலந்து ஒன்றி நிற்கின்றான் எனினும், அவற்றின் வேறாகத் தனித்தும் விளங்குகின்றான். அகரம் உயிர்களோடும் மெய்களோடும் ஒன்றாய்

வேறாய் உடனாய்க் கலந்து நிற்பினும், ஒலியியல் நுட்பம் உணர்ந்த அறிஞர்களுக்கன்றிப் பருப்பொருள் அறிவினர்க்கு அவ்வியல்பு விளங்குவதில்லை; அதுபோலவே இறைவனும் உலகுயிர்களோடு கலப்பினால் உடலின் உயிர் போல் ஒன்றாகியும், பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல் வேறாகியும், உயிர்க்குயிராதற் றன்மையாற் கண்ணொளியின் ஆன்ம போதம் போல உடனாகியும் நின்று அருள்செய்து போதருகின்றானாயினும், மெய்யுணர்வுபெற்ற மேலோர்கட்கன்றி அவனது அவ்வருளியல்பு விளங்குவதில்லை. அங்காந்த அளவில் தோன்றும் அகரமும், அதன் இயைபாற் பிறந்தொலிக்கும் மெய்யுயிர் எழுத்துக்களும் ஒருவனால் ஒலிக்கப்பட்டுத் தோன்றுதலின், தோற்றமும் ஈறும் உடையனவாகக் கருதப்படுமெனினும், முக்காலத்து மக்களாலும் எக்காலத்தும் ஒலிக்கப்படுதலின், அவை என்றும் உளவாய் நின்றிலங்கும் அழிவில் பொருள்களேயாம்; அதுபோல இறைவனும் இறைவனால் இயக்கப் பெறும் உலகுயிர்களும் முத்தொழில் நிகழ்ச்சிகளை உடையனவாயினும், என்றும் உளவாம் அழிவில் பொருள்களே யாகும். அகர ஒலி ஒன்றே வெவ்வேறு மொழியாளர்களாற் பல்வேறு வடிவினதாக எழுதப்படுகின்றது; அதுபோல இறைவன் ஒருவனே வெவ்வேறு சமயத்தினராற் பல்வேறு வடிவினனாகவும் பெயரினனாகவும் வைத்து வழிபடப் படுகின்றான். பேச்சளவில் மட்டுமுள்ள திருந்தாமொழிகளில் அகரம் முதலிய ஒலிகட்கு வரிவடிவில் எழுத்துக்கள் இல்லையாயினும், திருந்திய இலக்கியச் செம்மொழிகளில் ஒலி வகைகளைக் காட்ட வரிவடிவங்கள் இன்றியமையாதன என்று நன்குணர்ந்து, எழுத்து வடிவங்கள் படைக்கப்பட்டுள்ளன; அது போல இறைவழிபாட்டிற்குத் திருவுருவங்கள் வேண்டா எனக் கரைந்து திரியும் ஒருசிலர் உளரெனினும், ஒலி வகைகளைக் காட்டுதற்கு எழுத்தமைப்புக்கள் வேண்டப்படுதல் போல, இறைவழிபாட்டிற்கும் திருவுருவ அமைப்புக்கள் வேண்டப்படும்.

"கட்புலன் இல்லாக் கடவுளைக் காட்டும்
சட்டகம் போலச் செவிப்புல ஒலியை
உட்கொளற் கிடும்உரு பாம்வடிவெழுத்தே"

எனவரும் நன்னூல் விருத்தியுரை மேற்கோள் நூற்பாவும்

ஈண்டுக் கருதற்குரியது. இங்ஙனம் அறிஞராய்க் கருதியுணரவல்லார் கருதியுணர்ந்து மகிழத்தகும் சிறந்த கருத்துக்கள் பலப்பலவும், இவ்வகர உவமையின்கண் செவ்விதின் அமைந்துள்ளமை கண்டு கொள்க!

வல்லினம், றட: தமிழிலக்கணமானது பதினெட்டு மெய்யெழுத்துக்களையும், வல்லினம் மெல்லினம் இடையினம் என மூன்றாகப் பிரித்து விளக்கும். 'கசடதபற' என்னும் ஆறும் வல்லினம் எனப்படும். இங்ஙனம் வல்லினம் எனச் சிறப்பெடுத்துக் கூறப்படினும், இவ்வாறனுள் 'றட' என்னும் எழுத்துக்கள் மொழிக்கு முதலில் வரும் சிறப்பைப் பெறுவதில்லை. இவ்விலக்கணச் செய்தியைக் கொண்டு, ஆசிரியர் சிவஞானமுனிவர் ஒரு சிறந்த சைவ சித்தாந்த உண்மையினைப் புலப்படுத்துகின்றார். சிவன் சீவன் என்னும் இரண்டும் போதவகையாற் சித்துப் பொருள்கள் என வழங்கப்படும். ஆயினும் இரண்டற்கும் உள்ள இடையீடு பெரிது. சிவன் அருட்சித்து. சீவன் அருளைச் சேரும் சித்து. சிவன் பவக்கேடு புத்திமுத்தி பண்ணும் சித்து, சீவன் அவற்றிற்படியும் சித்து. சிவன் அறியுப்சித்து. சீவன் அறிவிக்கப்படும் சித்து. சிவன் அநாதி முத்த சித்து, சீவன் அநாதி பெத்த சித்து. ஆதலினால் இரண்டும் அனைத்தாலும் ஒன்றாகாமல் அநந்நியமாகவே இருக்கும். இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள இவ்வேற்றுமையினைச் சிவஞான முனிவர் பின்வருமாறு ஒரு தனிப் பாடலால் விளக்கியருள்கின்றார்:

"வரையேல்! தவிட்டமுதம் சேர்தனிட
உண்டனை வல்லினம்என் றாலும்
உரையே!ற இட்டமுதல் ஆகுமோ?
எனைச்சித்தென் றரைக்கில் என்னாம்?
கரையேறு அவிட்டமுதல் நாளவரைக்
கொண்டு,ஈறும் புலிசை மேவும்
கரையேற விட்டமுதல் வா!உன்னை
அன்றியும்ஓர் கதியுண் டாமோ?"

ஙப்போல்வளை: தமிழிலக்கணத்திற் பிறமொழிகளின் இலக்கணத்திற்போல இன்றி, இன்னின்ன எழுத்துக்கள் தான் சொற்களின் முதல் இடை கடைகளில் இவ்விவ்வாறு வரும் என்று எண்ணிக் கணக்கிட்டு வரையறை செய்து

கூறப்பட்டுள்ளது. இது தமிழிலக்கணத்தின் வியத்தகு சிறப்புக்களுள் ஒன்றாகும்! அம் முறைப்படி ஆராய்ந்து காணின், தமிழ் நெடுங் கணக்கினுள் இடம் பெற்றுள்ள ஙு, ஙூ, ஙி, ஙீ முதலிய பன்னிரண்டு உயிர்மெய் யெழுத்துக் களும் சொல்லின் முதலிடை கடைகளில் யாண்டும் வருவதில்லை. 'அங்ஙனம்', 'இங்ஙனம்' முதலிய ஒருசில சொற்களில் ஒரோவழி ஙகரம் விரவி வருவதுபோலக் காணப்படுமாயினும், அச்சொற்கள் உண்மையில் 'அங்கனம்', 'இங்கனம்' என வரற்பாலனவற்றின் மரூஉவே என்றும், உண்மையிற் கூர்ந்து நோக்கினால் 'நன்கனம்', 'செவ்வனம்' என்னும் சொற்களிற்போலவே மேலைச் சொற்களிலுங்கூட ஙகரம் இல்லையாதல் உணரப்படும் என்றும் அறிஞர்கள் கூறுவர். இவ்வாற்றாற்சொற்களின் முதலிடை கடைகளில்யாண்டும் வரப்பெறாமற் பயனின்றி வறிதேகிடந்துங்கூட, ஙகரம் முதலிய பன்னிரண்டு உயிர்மெய் யெழுத்துக்களும் தமிழ் நெடுங் கணக்கில் இடம் பெற்றமைக்குக் காரணம், அங்கு இங்கு பங்கு நங்கை முதலிய பல சொற்களில் ஙகர ஒற்று இன்றியமையாது நின்று பயன்படுதலே யாகும். எனவே, ஙகர ஒற்று ஒன்றின் காரணமாகவேதான், அதனைச் சார்ந்த ஙகர உயிர்மெய்கள் பன்னிரண்டும் வாழ்வுபெற்று விளங்கி வருகின்றன. தமிழிலக்கணம் தரும் இச் செய்தியைக் கொண்டு, தமிழ்ப் புலமையிற் சான்ற அவ்வைப் பிராட்டியார் அரும்பெறல் வாழ்வியல் உண்மையொன்றனை நம்மனோர் மனங்கொள உணர்த்துகின்றார்! ஙகரஒற்று ஒன்றே, தான் பயன்பட்டு நின்று பயன்படாத ஏனைய பன்னிரண்டு ஙகர உயிர்மெய் எழுத்துக்களை வாழ்வித்தல் போல, "பல்லார் பயன்துய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே நல்லாண் மகற்குக் கடன்" என்றதனை யுணர்ந்து, ஒவ்வோர் ஆண்மகனும் தான் பிறந்த குடும்பம் சமுதாயம் நாடு முதலியனவற்றிற்குப் பயன்பட்டு நின்று, தன்னைச் சார்ந்த பலரையும் வாழ்வித்தல் வேண்டும் என்னும் அரிய பெரிய அறிவுரையினை, அவ்வைப் பிராட்டியார் மிகமிகச் சுருக்கமாக "ஙப்போல் வளை" என்னும் தொடராற் குறிப்பிட் டுணர்த்தியிருப்பது, எத்துணை இறும்பூது பயக்கின்றது!

மாத்திரை: மாத்திரையாவது எழுத்துக்களை ஒலிக்கும் அளவு. இயல்பாக நிகழும் கைந்நொடிப் பொழுதும்

கண்ணிமைப் பொழுதும் மாத்திரை எனப்படும். இம் மாத்திரைகள் உயிரளபெடைக்கு மூன்றும், நெட்டெழுத்துக்கு இரண்டும், குற்றெழுத்துக்கு ஒன்றும், ஒற்றெழுத்துக்கு அரையும், ஆய்த மகரக்குறுக்கங்களுக்குக் காலும் ஆகும். எழுத்துக்களுக்குரிய இம்மாத்திரையின் அளவை அடிப்படையாகக்கொண்டு, குமரகுருபரர் ஓர் அழகிய பாடலை அருளிச் செய்கின்றார்: 'யான் எனது ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரின் திருவடித் தாமரைகளைத் தலைமேற்சூடிக்கொள்ள, அவர் எழுந்தருளிவிளங்கும் கமலை (திருவாரூர்)யூரிற் குறுகினேன் (அடைந்தேன்); அவ்வளவில் என் பெயரில் ஒரு மாத்திரையளவு குறுகினேன் (குறைந்தேன்)' என அவர் குறிப்பிடுகின்றார். ஞானாசிரியரின் அருளாற் சிவனாக இருந்த தாம் சிவமாந் தன்மைப் பெருவாழ்வு பெற்றதாக அவர் கூறுகின்றார். சீவன் என்னும் நெட்டெழுத்துச் சொல், சிவன் என்னும் குற்றெழுத்துச் சொல்லாகும்போது ஒரு மாத்திரை குறுகுதல் காணலாம்.

"எற்கமலஞ் செய்யும் எழில்மாசி லாமணிதாட்
பொற்கமலம் சென்னி பொலிவித்தேன்—நற்கமலை
யூரிற் குறுகினேன் ஓர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின்."

எழுத்துப்போலி: ஈரெழுத்துக்கள் கூடி ஓரெழுத்துப் போல வருவன எழுத்துப் போலி எனப்படும். இவற்றைச் 'சந்தியக்கரம்' எனவும் 'சமானக்கரம்' என்றும் வடமொழியிற் கூறுவர். இவ்வெழுத்துக்களை 'இணையெழுத்து' என மொழிபெயர்த்து வழங்குதலே பொருத்தம் என ஒரு சார் அறிஞர்கள் கருதுவர். அஇ, அய் என்பன ஐ என்னும் எழுத்தைப் போலவும்; அஉ, அவ் என்பன ஒள என்னும் எழுத்தைப் போலவும் வருதலால் இவைகள் எழுத்துப்போலி எனப்பட்டன. போலிச் சரக்கு, போலியிலக்கணம், போலியுரை என்றாற்போலப் போலி என்னும் சொற்பற்றி எழுத்துப்போலி என்பதனையும் இழிவாகக் கருதி இகழ்ந்து தள்ளி விடுதலாகாது. தள்ளிவிடின், "கையிறைச் சொலிக் கண்ணினிற் கேட்டிடும் மொய்கொள் சிந்தையின் மூங்கையும் ஆயினேன்", "ஔவிய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான் கேடும் நினைக்கப்படும்" என வரும் செய்யுட்களெல்லாம் மோனைத் தொடையொடும்

எதுகைத் தொடையொடும் மாறுபட்டு, இலக்கண வழு வாய் ஒழியும். அதுபற்றியே இலக்கணக் கொத்துரைகாரர் "போலி எழுத்தைப் போற்றுதல் கடனே" என வற்புறுத் தருளினர். ஆசிரியர் சிவஞானசுவாமிகள் எழுத்துப்போலி என்னும் இவ்விலக்கணநூற் குறியீட்டினைப் பின்வரும் காஞ்சிப்புராணச் செய்யுளில் நயமுறக் கையாளுகின்றார். எழுத்துப் போலியைப் போலி என்று இகழாது ஏற்றுக் கொள்ளுதற் கொப்பத் தாம் பாடும் செய்யுட்போலியையும் கூட, அறிஞர்கள் இகழாது ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும் என அவர் சுவைமிக அவையடக்கம் கூறுகின்றார்.

" எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர் அதுபோல்
புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட் போலியையும்
பழுத்த கேள்வியர் கைக்கொள்வர் என்பது பற்றி
விழுத்த நாணினேன் சிவகதை விளம்புதற் கிசைந்தேன்."

(தொடரும்)

---

# திருவாசகம் - சில குறிப்புக்கள்

திரு. மு. அருணாசலம், எம்.ஏ.

தமிழ் நூல்களைப் பொறுத்தவரையில், நூல்களில் பாட பேதங்கள் எவ்வாறு ஏற்பட்டன என்று ஆராய்தல் மிகவும் சுவையான ஒரு வேலை. பழங்காலத்தில், அச்சின்மையால் பனை ஓலையில் எழுத்தாணியால் பாடல்களை எழுதி வைத்தார்கள். எழுதுதல் மிகவும் சிரமமான செயல். பண்டைத் தமிழ்ப் புலவர்கள் அக்காலத்திலுள்ள எல்லா நூல்களையும் நன்கு மனப்பாடம் செய்திருந்தார்கள். அந்தகக்கவி வீராகவ முதலியார் "ஏடாயிரங்கோடி எழுதாது தன் மனத்து எழுதிப் படித்தார்" என்பது வரலாறு. மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் நடக்கும் போதும், படுத்தபோதும் பெரு நூல்களாகிய கந்தபுராணம், பெரிய புராணம் போன்றவற்றை அநாயாசமாகத் தம் மாணாக்கர் களுக்கு, ஏட்டுதவி இன்றி, நினைவிலிருந்தே பாடம் சொல்லி வந்தார் என்று ஐயர் அவர்கள் கூறுகிறார்கள். ஏடுகளும் அக்காலத்தில் குறைவாகவே இருந்தன.

அக்காலத்தில் படித்தவர்களுக்குத் தங்களுடைய நேரமும், கவனமும், ஆற்றலும் வேறு வழிகளில் சிதறுண்டதில்லை. எந்த நேரமும் எல்லா நினைவும் படிப்பிலேயே சென்றமையால், எந்த நூலும் மனப்பாடம் செய்யப் பெற்றே வந்தது. செய்தலும் எளிதாயிருந்தது. 'கற்றலுக்குப் பொருள் நிற்றல்' என்று திருவள்ளுவர் கூறுகின்றார். கற்றல் என்றால் என்றும் மனத்திலே நிறுத்துதல் என்று தான் பொருள். பண்டிதனுக்குத் தன் ஞாபகம்தான் உதவியதேயன்றி, புரட்டுவதற்குச் சுவடிகள் பயன்பட்டதில்லை.

நூலைப் பிரதி செய்தல் என்பது மிகவும் கடினமான செயல். பாமரரும் பிரதி செய்தார்கள், பண்டிதரும் பிரதி செய்தார்கள். பாமரர்கள் செய்தபோது கூலிக்காகவே பிரதி செய்தல் பெரும்பான்மையான வழக்கு. புலமை இல்லாமையால் இவர்கள் பிரதி செய்யும் காலத்தில் சொற் பிழைகள், எழுத்துப் பிழைகள் நிரம்ப ஏற்பட்டன. மூலத்தைப் பிழைபடப் படித்ததனாலும் பிழைகள் எழுந்தன. இவர்கள் எழுத்தில் எழுத்துப் பிழைகள் ஏற்பட்டதனாலும், பிழைகள் ஏற்பட்டன. இவை யாவும் 'பாடபேதங்கள்' என்று பின்வந்தோர் கருதவேண்டிய துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது.

இந்த நிலையில், அருட்பாசுரங்களை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். பல்லாயிரம் தமிழ் மக்கள் தலங்கள் தோறும், அடங்கல் முறைகளையும், திருவாசகத்தையும் ஓதி வந்தார்கள். மிகுந்த பக்தியோடு நெஞ்சார மனமுருகி ஓதினார்கள். ஓதியவர்கள் எல்லோரும் இலக்கண அறிவு படைத்தவர்கள் அல்லர். இவர்கள் சிலசமயம் திருமுறைகளைப் பூஜையில் வைத்து மலர்களால் அருச்சித்து வழிபட முற்பட்டபோது, ஆதியில் கிடைத்த திருமுறைகளின் ஏட்டுப் பிரதிகள் பலமடங்கு பெருகலாயின. இவை இரண்டுவிதத்தில் பெருகின. மூலப்பிரதியைப் பார்த்துப் பெயர்த்து எழுதிக்கொண்டே போனபோது, பலப்பல புதுப் பிரதிகள் உண்டாயின; இவை ஒருவகை. மற்றொன்று, திருமுறைகள் முழுமையும் மனப்பாடம் செய்துவைத்திருந்தோர், தம் ஞாபகத்திலிருந்து ஏட்டில் எழுதிவைத்ததனால் உண்டான பிரதிகள். இந்த இரண்டு வகையிலும் எழுந்த பிரதிகளே இன்று தமிழ் நாட்டில் வழங்கும் பிரதிகள் யாவும்.

பண்டிதராயுள்ளார் தம் ஞாபகத்திலிருந்து நூலைச் சொல்ல முற்படும்போது, சில தொடர்களோ வரிகளோ மறந்து விடுதல் மனித இயல்பு. திறமை உடையவர்கள் அந்த நிலையில் கருத்துக்கு ஏற்பத் தாங்களாக அந்த இடத்தைப் பூர்த்தி செய்து கொள்வார்கள். இதற்குத் துணை செய்யும் அம்சங்கள், கருத்து அமைதியுடன்கூட, எதுகையும் மோனையும் தளை சீர் முதலான பிறயாப்பமைதிகளுமாம். பூர்த்தி செய்தபோது மூலபாடத்தில் மாறுதல் விளைந்தது. இவ்வாறு ஏற்பட்ட மாறுதல்கள் எல்லாம், பாடபேதம் என்று பிற்காலத்தில் கொண்டுவிட்டோம். எந்த நூல் மக்களால் அதிகமாகப் பயிலப்பெற்று வந்ததோ, அந்த நூலின் பிரதிகளில்தான் பாடபேதங்கள் அதிகம். கம்ப ராமாயணம், தேவாரம், திருவாசகங்களை உதாரணமாகச் சொல்லலாம். சாஸ்திரத்தில் ஓர் உதாரணம் காட்டி, அடுத்துத் திருவாசகத்தைப் பற்றிச் சில சொற்கள் இங்குக் கூறுவேன்.

உண்மை விளக்கம் என்ற சித்தாந்த சாத்திரம் மனவாசகங்கடந்தார் பாடியது. இது சைவசித்தாந்த சமயத் தத்துவ உணர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்துள்ள ஒரு சிறந்த கருவூலமாகும். இந்த நூல் தத்துவங்கள் முப்பத்தாறையும் சுருக்கமாகவும், விளக்கமாகவும் விரிக்கின்ற சிறு நூல். மாணாக்கன் குருவை நோக்கி "ஆறாறு தத்துவமேது?" என்பது முதலாக வினவும் வினாக்களுக்கு விடைகூறும் குருவின் உபதேசமாக உள்ளது.

"ஆறாறு தத்துவமும் சொன்னோம்"

"ஆறாறு தத்துவமும்... வகுத்துரைத்தீர்"

என்பன முதலான தொடக்கங்கள் நூலின் பொருளைச் சுட்டும். இதன் 44-ஆம் பாடலில் சில பதிப்புக்களில் காணப்படும் பின்வரும் பாடம் இங்குக் குறிப்பிடத்தக்கது:

"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் யாவைக்கும் அப்பாலாம்
மோனாந்த மாமுத்தி யும்." —சமாஜம், முதல் பதிப்பு

இதன் பழைய உரையில் வரும் கடைசிப் பகுதி, "ஆனந்த நடனமும், தத்துவாதீதமாகிய மௌன (ஞான)

பாயிருக்கும் பரமுத்தியும் பஞ்சாக்கரமே" என்பதாகும். இங்குத் தத்துவாதீதம் என்ற தொடர் கவனிக்கத் தக்கது. தத்துவாதீதமாகிய பரமுத்தி என்று சொல்லுமிடத்து, அதற்குரிய மூலபாடம் "யாவைக்கும் அப்பாலாம் ......மாமுத்தி" என்றுள்ளது. 'யாவைக்கும்' என்ற மூலம் 'தத்துவாதீதம்' என்ற பொருளுக்கு ஏற்ற மூல மன்று. "ஆறாறுக் கப்பாலாம்" என்ற பாடம் பல ஏடு களில் (சமாஜம், இரண்டாம் பதிப்பு) காணப்படுகிறது. இது முப்பத்தாறு "தத்துவங்களுக்கு அதீதமாகிய" என்ற பொருள் தரவல்லது. எனவே, மூலம் "ஆனந்தத் தாண்டவ மும் ஆறாறுக் கப்பாலாம்; மோனந்த மாமுத்தியும்" என் றிருக்கவேண்டும். இது கருத்துக்கும் பாட்டிலக்கணம் பலவற்றுக்கும் ஒத்து வருகிறது.

ஆனால்; இங்கு நாம் கருதுவது இந்தப் பாடபேதம் எவ் வாறு எழுந்தது என்பது. உண்மை விளக்கம் நன்றாக மனத்திருத்திப் பாடம் சொன்ன பெரியார் ஒருவர், தாம் ஏட்டில் எழுதிவைத்தபோதோ, மற்றவர்களுக்குப் பாடம் சொன்னபோதோ, சொல்லிக்கொண்டே வந்தபோது, "ஆறாறுக்கும்" என்ற சொல்லை மறந்திருக்கவேண்டும். பக்குவப்பட்ட அவருடைய உள்ளம், அந்த நிலையில், கருத் துக்கும் மோனைக்கும் தளைக்கும் முரணில்லாமல், "யாவைக் கும் அப்பாலாம்" என்று பாடிக்கொண்டே போயிற்று. பண்டைய உரையைவைத்து ஒப்பு நோக்கும் போதுதான் "யாவைக்கும் என்பது சிறப்பன்று; ஆறாறுக்கு என்பதே சிறப்புடைய சரியான பாடம்" என்று விளங்குகின்றது. கடவுள் யாவைக்கும் அப்பாலான் என்பது உண்மையே; ஆயினும், தத்துவங்கள் முப்பத்தாறையும் கூறும் நூலில், தத்துவங்களுக்கு அப்பாற்பட்ட பரமுத்தி என்று கூறுவதே பொருட் பொருத்த முடையது.

இந்த உதாரணம், ஏட்டுப் பிரதியின் துணையில்லாத போது, நினைவிலிருந்து சொல்லியதால் சில பிழைகள் ஏற்பட்டன என்பதை நமக்கு நன்கு உணர்த்த வல்லது.

திருவாசகத்தில் இவ்வாறு அனேகவரிகளும், பாடல் களும் காணப்படுகின்றன. இவை யாவும் நினைவினால் எழுந்த பாடல்களும் வரிகளும் ஆகுமேயன்றி, உண்மைத் திருவாச கப் பாடல்கள் என்று நாம் சொல்வதற்கில்லை. இத்தகைய

பாடல்களின் அட்டவணையைத் திரு. எஸ். ராஜம் அவர்களின் திருவாசகப் பதிப்பில் 135-136-ஆம் பக்கங்களில் காணலாம். 425-ம் பக்கத்தின் இறுதியில், சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் திருவாசகம் என்ற தலைப்பில் உள்ள இரண்டு பாடல்கள் எடுத்துத் தரப்பட்டுள்ளன. அவை பின் வருமாறு:

"அன்னையும் ஆயமும் கேண்மின்களோ எனது
ஆர் உயிர் ஆய சிவ பெருமான்
என்னது யான் எனும் இவ்விரண்டும்
என் உளன் ஆய் இருந்தே கவர்ந்தான்
முன்னை உறவும் பிறவும் காணேன்
மூவுலகும் பரந்து எங்கும் தான்ஆய்
இன்னது அளவு என்று இயம்ப ஒண்ணு
இன்ப வெள்ளத்து எனை இட்டனனே.

வானும் நிலனும் அடையக் கேண்மோ,
வள்ளல் பெருந்துறை மேய பெம்மான்
தானும் தன்தையலும் ஆகி என்தன்
சதுரை அழித்து மால்தந்த போதே
ஊனும் உயிரும் உணர்வும் ஒன்றாய்
உரோமம் எல்லாம் சிலிர்ப்பித்தது என்னே!
யானும் எனை அறியாத வண்ணம்
இன்ப வெள்ளத்து எனை இட்டனனே."

இந்த இரண்டு பாடல்களும் திருவாசகந்தானா என்பது ஆய்தற்குரியது. பெருந்திரட்டை நன்கு ஆராய்ந்தவர்கள் ஒரு முடிவிற்கு வரக்கூடும். அத்திரட்டைத் தொகுத்தவர் தாம் கூறவந்த கருத்துக்களுக்கும் தலைப்புக்களுக்கும் ஏற்ற வாறு பண்டைய நூல்களிலிருந்து பல நூறு பாடல்களைத் தொகுத்திருக்கிறார். அவற்றுள் தேவாரம், திருமந்திரம் போன்ற தெரிந்தவை சில; தெரியாத பெயர் அமைந்தவை பல. ஒவ்வொரு தலைப்பிலும் தொகுப்பாசிரியர் சில வினாக் களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையாகப் பல பாடல் களை எழுதி இருக்கிறார். இவற்றை ஒரு தொகுப்பாகப் பார்க்கும் போது இப்பாடல்கள் யாவும் இத்தொகுப் பாளரே எழுதின என்றும், இவற்றுக்கு நூற்பெயர்கள் பின்வந்த அவருடைய மாணாக்கரால் அமைக்கப் பெற்றன என்றும் கருத இடமிருக்கிறது. (இக்கருத்தை விரித்

துரைக்க இது இடமன்று.) மேற் காட்டிய இரு திருவாசகப் பாடல்களும் இத்தகையனவே. திருவாசகத்திலும், பிற அருட்பாசுரத்திலும் ஆழத் தோய்ந்திருந்த உள்ளமுடைய தொகுப்பாளர், குறிப்பிட்ட பகுதியில் தாமாகச் சில பாடல்கள் எழுதிவைத்தார்; அப்பாடல்களே இவை. இவற்றைப் படித்தவர்கள், பொருளமைதி, சொல்லமைதியைக் கண்டு இவை திருவாசகம் என்று எழுதிவிட்டார்கள். இவ்வளவே நாம் இவற்றைக் குறித்துச் சொல்லத்தக்கது. இவை திருவாசகப் பாடல்கள் என்றெண்ணி இவைபோன்ற பாடல்கள் இன்னும் பல இருக்கக்கூடும் என்ற ஆராய்ச்சியில் யாரும் இறங்க வேண்டியதில்லை.

இனி, தருமபுரத்தார் வெளியிட்டுள்ள ஞானாவரண விளக்கம் என்ற உரை நூலில் காணப்பெறும் இரண்டு பாடபேதங்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவை. ஒன்று நீத்தல் விண்ணப்பம் இருபத்தொன்பதாம் பாடல்:

"குலம் களைந்தாய் களைந்தாய் என்னைக்
குற்றம் கொற்றச் சில ஆம்
விலங்கல் எந்தாய் விட்டிடுதி கண்டாய்
பொன்னின் மின்னு கொன்றை
அலங்கல் அம்தாமரை மேனி அப்பா,
ஒப்பு இலாதவனே,
மலங்கள் ஐந்தால் சுழல்வன்,
தயிரில் பொரு மத்து உறவே."

இந்தப் பாடல் ஞானாவரண விளக்க உரையில் பின்வருமாறு உள்ளது.

"குலம்களைந்தாய் களைந்தாய் என்னைக்
குற்றம் கொற்றச் சிலையாம்
விலக்கல் எந்தாய் விட்டிடுதி கண்டாய்
விண்ணும் மண்ணும் எல்லாம்
கலக்கமுன் னோஞ் சமுறச்
செய்தாய் கருணாகரனே
மலக்களைந்தாற் சுழல் வன்தயிரில்
பொரு மத்து உறவே."

இதற்குத் "திருவாசகத்தில் இப்போதுள்ள பாடத்திலும் இது சிறந்துள்ளது" என்ற ஓர் அடிக்குறிப்பும்

காணப்படுகிறது! இது பாடபேதமே யன்று; பாடல்களின் குழப்பம். நீத்தல் விண்ணப்பம் இதற்கு முந்திய இருபத்தெட்டாம் பாடல் பின்வருமாறு :

"புலன்கள் திகைப்பிக்க, யானும் திகைத்து, இங்குஓர்
பொய்ந்நெறிக்கே
விலங்குகின்றேனை விடுதி கண்டாய் விண்ணும்
மண்ணும், எல்லாம்
கலங்க, முந்நீர் நஞ்சு அமுது செய்தாய்
கருணாகரனே
துலங்குகின்றேன் அடியேன் உடையாய் என்
தொழுகுலமே."

உரையாசிரியர் ஏட்டினுடைய துணையில்லாமல் தம் ஞாபகத்திலிருந்தே பாடல்களைச் சொல்லி வந்தபோது 'குலங்களைந்தாய்' என்ற பாடலில் 'புலன்கள் திகைப்பிக்க' என்ற பாடலின் இரண்டு வரிகளைக் கலந்து சொல்லி விட்டார் என்று கொள்ளுவதே முறையாகும். இது இரண்டு பாடல்களை ஒன்றாய்ச் சேர்த்துக் குழப்பிவிட்டதில்லையேயன்றி, பாடபேதமன்று. எனவே, நினைவிலிருந்து சொல்லும்போது ஏற்படும் பிழைகள் பாடபேதங்கள் என்ற பெயர் பெற்று விடுகின்றன என்பதற்கு இது சிறந்த சான்று.

மற்றொன்று அதே உரையில் :

"கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பல்துறை பிழைத்தும்
ஏனைப் பெறுவதனுக் குமைப் பெறவேண்டும்."

எனக்கூறும் அவற்றுள் கூறியவாற்றானும் உணர்க என்று எழுதி, கடைசி வரியாகிய

"ஏனைப் பெறுவதனுக்குமைப் பெறவேண்டும்"

என்பது 'புதியதொரு பாடப் பேறு' என்று ஓரடிக் குறிப்பும் தரப்பட்டுள்ளது.

இது புதிய பாடப்பேறு அன்று. முந்திய வரிகள், திருவாசகம்; ஆனால் "ஏனைப் பெறுவதனுக் குமைப்பெறவேண்

டும்" என்ற வரி மட்டும் உரையாசிரியருடைய கூற்றே யன்றி, திருவாசக வரியன்று. ஓலை எட்டுப் பிரதியில், இது திருவாசகப் பகுதி, இது ஏனைய பகுதி என்று பிரித்துக் காட்டும் முறை இல்லை. அன்றியும், இவ்வரியை இடைப் பெய்தால் திருவாசகத்தின் முன்பின் தொடர்பு காண முடியாது. ஆதலால் இது பாடபேதமே அன்று.

திருவாசகத்துள் மிகைப் பாடல்களை நாம் ஆராய வேண்டியதில்லை; ஆனால் அவை பின்வந்த பண்டிதரா யிருந்த மெய்யடியார்களின் நினைவுத் திறனால் விளைந்தவை; பாடபேதங்களும் ஓரளவு அத்துணையே என்ற கருத்து இதுகாறும் கூறப்பெற்றது.

— —

# திருமணை முறை

கோவை · திரு. C. M. முத்துசாமி பிள்ளை, I.A.S. (Retd.)

மக்கள் வாழ்க்கையில் மணம் கமழ்வதற்கு வழி வகுக்கிறது திருமணம். அது எல்லாச் செல்வங்களையும் அளிக்க வல்லது. திருமணத்தின் சிறப்பை முதன் முதலில் எடுத்துக் காட்டியவர் ஆதி பரம்பொருளாகிய சிவபெருமானே யாவர். இவ்வுலகினில், மானிடப் பிறவி பெற்றவர்கள் தங்கள் பிறவிப் பயனைப் பெறுவதற்கு முயற்சி செய்யத் தலைப்பட்டார்கள். யோகம் செய்து விண்ணுலகம் அடையலாம் என முதலில் நினைத்தனர். ஆனால், அவர்களது மனம் பக்குவமடையாத நிலையில் இருந்தமையால், இவர்களது கோரிக்கை கை கூடவில்லை, அவர்களும் நிலை தவறி வீழ்ச்சி அடைந்தனர். பின்னர், அவர்கள் தங்கள் தங்கள் மனத்தைச் சீர்படுத்திக்கொள்ள விரும்பினர். இச் சூழ்நிலையில் அவர்களுக்கு உதவி செய்யும் நோக்கத்தில் தென் திசையை நோக்கி நடனம் புரியும் சிவபெருமான் ஒரு பெண்ணை உகந்தார். அவரது நினைவின் விளைவாக ஆண் பெண்ணுடன் வாழ்க்கையை நடத்த வேண்டுமென்ற நியதி தோன்றலாயிற்று. அவர் அவ்வாறு பெண்ணை நினையாமல் இருந்திருப்பாரேயெனில் மனிதர்கள் வீழ்ச்சியடைந்திருப்பார்கள். சிவபெருமான் காட்டிய வழியைப் பின்பற்றி மக்களும் இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளலாயினர். இக்கருத்தை,

"தென்பா லுகந்தாடும் தில்லைச் சிற்றம் பலவன்
பெண்பா லுகந்தான் பெரும் பித்தன் காணேடி
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

என்று திருவாசகம் தெரிவிக்கின்றது. ஒரு ஆண்மகன் ஒரு பெண்ணுடன் கூடி வாழ்தல் என்பது மட்டும் போதாது. அப்பெண் திருமணம் செய்துகொள்ளப்பட்ட பெண்ணாயிருக்க வேண்டும். இது தான் முறை. இம்முறையையும் எடுத்துக் காட்டினவர் சிவபெருமானே. அவர், மலையரசன் பொற்பாவையாகிய பார்வதியாரை உலகறியத் திருமணம் செய்துகொண்டார். அவர் இவ்வாறு உலகறியத் திருமணம் செய்துகொள்ளாம லிருந்தால் உலகினில் சாத்திரங்கள் விதித்த ஒழுக்கமும், கலைகளும் நிலை கலங்கிப் போயிருக்கும். சிவபெருமான் காட்டிய வழியைப் பின்பற்றி உலக மக்கள் திருமணம் செய்துகொண்டமையால் இன்றைய நாளிலும் ஒழுக்கம் நிலை குலையாது விளங்குகிறது. இவ்வுண்மையை

"மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை
உலகறியத் தீவேட்டா னென்னுமது வென்னேடி
உலகறியத் தீவேளா தொழிந்தனனே லுலகனைத்துங்
கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங்காண் சாழலோ"

என்னும் திருவாசகம் வலியுறுத்துகின்றது. இத்தகைய தெய்வீகத் திருமணத்தின் உட்கருத்துக்கள் எல்லார்க்கும் விளங்கவேண்டும். திருமணத்தின் ஒவ்வொரு சடங்கும் தெய்வ அருளை வரவழைப்பதாக இருக்கவேண்டும். ஒவ்வொரு சடங்கிற்கும் பொருத்தமான பாடல்கள் வாயாரப் பாடப்படவேண்டும். அப்பாடல்களின் பொருளை உணர்ந்து கொள்ளுதலும் இன்றியமையாதது.

இனி, திருமணச் சடங்குகளைச் சுருக்கமான வகையில் தெரிந்து கொள்வோமாக:

தெய்வ வழிபாடு: எக்காரியத்தைச் செய்வதாயிருந்தாலும், அக்காரியத்திற்கு இடையூறு நேரிடக்கூடாது எனத் தெய்வ அருளை வேண்டுவது ஒரு சிறந்த முறையாகும். திருமணத்திற்கும் எந்த வகையான விக்கினமும்

ஏற்படக் கூடாதென்பதற்காக விநாயகரை முதலில் வழி படவேண்டும்.

"விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்—விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து"

என்பது கபிலர் வாக்கு.

மஞ்சள் பொடியால் பிள்ளையார் பிடித்து ஒரு இலையின் மேல் வைத்து, "அருவால் உருக்கொண்ட ஆநந்த வெள்ளமே" எனப் பிள்ளையாரை வரவழைத்து,

"ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தி னிளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே"

என்னும் திருமூலர் பாடலைப் பாடித் துதிக்க.

திருமண அறையின் கீழ்ப்பாகத்தில் அரசாணிக்கால் நடுக. அரசாணிக்கால் என்பது பச்சை மூங்கில். அதற்கு அரசிலை கட்டிப் பவித்ரப் பூக்களைச் சூட்ட வேண்டும். இக் காரியங்களை மங்கலப் பெண்கள் செய்ய வேண்டும். இதற்குப் பின் குட வழிபாடு. இரண்டு பெரிய மண் குடங்களுக்கு வெள்ளை சிவப்பு வர்ணங்கள் பூசி அவைகளை அலங்கரிக்க வேண்டும். அக்குடங்களை மாவிலை, பூ முதலியவைகளைக் கொண்டு அலங்கரிக்க வேண்டும். இரண்டு குடங்களையும் சிவபெருமானாகிய தந்தையாராகவும், சிவசக்தியாகிய நமது அம்மையாராகவும் பாவிக்கவேண்டும்.

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
இயமானனாய் எறியுங் காற்றுமாகி
அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவும் தாமேயாகி
நெருநலையாய் இன்றாகி நாளையாகி
நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே"

என்னும் பாடலைப் பாடித் தேங்காய், பழம் முதலியவை படைத்து வழிபட வேண்டும்.

மணமக்கள் : அடுத்து நிகழவேண்டியது மணமக்களைப் பற்றியதாம். மணமக்களுக்குப் புதிய ஆடைகள் அணிவிக்க வேண்டும். அவர்கள் முன்னிலையில் பூமாலை, கனி வர்க்கங்கள், வெற்றிலை, பாக்கு முதலியவைகளை முறைப்படி வைக்க வேண்டும்.

" தனம்தரும்; கல்விதரும்; ஒருநாளும் தளர்வறியா
மனம்தரும்; தெய்வவடிவும்தரும்; நெஞ்சில் வஞ்சமில்லா
இனம்தரும்; நல்லன எல்லாம்தரும்; அன்பர்என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே "

—அபிராமி பட்டர்

என்னும் பாடலைப் பாடி இறைவியின் அருளை வரவழைக்கவும்.

மணமக்கள் மணவறையில் உட்கார்ந்தபின் மஞ்சள் தடவப்பட்ட கயிற்றால் கட்டப்பட்ட மஞ்சள் கொம்புக் காப்பை, அரசாணிக் காலுக்குக் கட்டுக. இன்னொரு மஞ்சள் கொம்புக் காப்பை மணமகன் வலக்கையில் கட்டுக. பின் மணமகன் அரிசியை இருகைகளிலும் எடுத்துக் கொள்ள வேண்டும். இரு தேங்காயைச் சேர்த்து அரிசியை மணமகள் கையில் மணமகன் கொடுக்க; மணமகள் கையில் மற்றொரு காப்பை மணமகன் கட்டுதல் வேண்டும்.

மணமகளுக்குப் பின் திருநீறு இட்டு,

" மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவாலவாயான் திருநீறே "

என்னும் பாடலைப் பாடி வாழ்த்துக.

மணமக்கள் தங்கள் தங்கள் பெற்றோர்களை வழிபடல் வேண்டும். தாய் தந்தையர்களைத் தண்ணீர் விட்டுக் கழுவி இரண்டு கைகளையும் குவித்துப் பூக்களைக் கொண்டு அருச்சிக்க.

" அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே!
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே "—மணிவாசகனார்

என்னும் திருவாசகப் பாடலை ஓதல் வேண்டும். மணமகள் தந்தையார் வெற்றிலைப் பாக்கை ஒரு தட்டில் வைத்துக் கொண்டு, மணமகன் தந்தையிடம், "உங்கள் அருமை மகன் இன்னவர்க்கு, எனது அருமை மகள் இன்னவளை வாழ்க்கைத் துணைவியாக அளிக்கிறேன்" எனக்கூற, மண மகன் தந்தையார், "எனது அருமை மகன் இன்னவர்க்கு, உங்கள் அருமை மகள் இன்னவளை வாழ்க்கைத் துணைவி யாக ஏற்றுக் கொள்கிறேன்" எனக் கூறுதல் வேண்டும்.

மணமகன், "கணவன் முறையால் என் மனையாளுடன் மனமொத்து உள்ளன்பு பூண்டு, எனது உடல், பொருளாவி மூன்றும் கடமைப்பட்டு வாழக் கடவேன்" எனக் கூற வேண்டும். மணமகள், "மனைவி முறையால், என் கணவ ருடன் மனமொத்து உள்ளன்பு பூண்டு எனது உடல் பொருளாவி மூன்றும் கடமைப்பட்டு வாழக் கடவேன்" எனக் கூறுதல் வேண்டும்.

அடுத்தது அழலோம்பல். மணலை நிலத்தில் இட்டு, அதன்மேல் நெல்லுமி பரப்பி அரசு, ஆல், மா, பலா சுள்ளிகளை வைத்து நெய் விட்டு அழலை வளர்த்து வழிபாடு செய்யவேண்டும்.

" ஒளிவளர் விளக்கே! உவப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங்கு ஆக
வெளிவளர் தெய்வக் கூத்து உகந்தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே."
—திருமாளிகைத் தேவர்

"கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானும் தேறினன் காண்க
அவனெனை ஆட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க
அண்டத் தரும்பெறல் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பம் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க !!" —திருவாசகம்

என்னும் பாடலைப் பாடிப் பழம் முதலியவை சமர்ப்பித்துப் பூசிக்க.

திருமங்கல நாணை மணமகன் மணமகளுடைய கழுத்தில் மூன்று முடியிட்டுக் கட்டுதல் வேண்டும். மணமகன் அம் முடியினின்றும் கையை எடுக்காமல் மலர், திருநீறு, குங்குமம் முதலியவைகளை, அதன்பேரில் சாத்த வேண்டும். எல்லாரும் பூமாரி சொரிந்து வாழ்த்த வேண்டும்.

"மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே."

மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டு, மும்முறை வலம் வந்து, அழலோம்பிப் பின் அமர்தல் வேண்டும். அதுசமயம் தீவினை அகலுமாறு ஒரு பாடல் பாடவேண்டும்.

"வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்

ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன்
வெள்ளி சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே.''

பால், பழம், வெல்லம், நெய், தயிர் இவைகளை அழலில் விடவேண்டும். பின் அழலை மணமக்கள் வழிபடுக. மணமகன் பொரியை முப்முறை அழலிலிட்டு வலம் வந்து மணமகளுடன் அமர வேண்டும்.

மஞ்சள் கலந்த அரிசியை அங்குள்ளவர்க்கு வழங்க வேண்டும். பெரியோர்கள் வாழ்த்தக் கூறி அரிசி வாழ்த்து தெரிவிக்க, மற்றவர்களும் வாழ்த்த வேண்டும்.

''சீரும் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவாருலகில்
ஊரு முலகுங் கழற வுழறியுமை மணவாளனுக் காள்
பாரும் விசும்பு மறியும் பரிசநாம் பல்லாண்டு கூறுதுமே''

''வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.''

'சீதமழை முகில்பொழிக தேசமெலாம் பயிர்விளைக செல்வம் ஓங்க
மாதர்குழாம் மக்கள்குழாம் மனையறங்களுடன்பொலிந்துமலிந்துவாழ்க
மேதகுசீர்ச் சைவநெறி வேதநெறி தழைத்தோங்க மேலும்மேலும்
பூதலமேல் சிவபெருமான் ஆலயங்கள் பூசனைகள் பொலிக மாதோ.''

''ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியா ரெல்லாம்.''

விளக்கு முன்வர, முளைப்பாலிகையோடு மணமக்கள் கைகோத்துக் கொண்டு, பாலும், பழமும் அருந்துதல் வேண்டும். பின் மாலையணிந்து மணப்பந்தலை வலம் வந்து, பிள்ளையார் வழிபாட்டை முடித்துக்கொண்டு, அரசாணிக் காலிலுள்ள காப்பைக் களைதல் வேண்டும். தாம்பூலம் முதலியவை வழங்குதலுடன் திருமணம் நிறைவுபெறும்.

---

# அறப் பயிற்சி மாலை

(வித்துவான் - அம்பை சங்கரனுர்)

நம் சைவ சித்தாந்த மகா சமாஜம் சைவ சமயத்திற் குரிய ஆக்கத் தொண்டுகள் பல புரிந்துள்ளது. சிறப்பாக நம் சமய சம்பந்தமான சாத்திர நூல்களையும் தோத்திர நூல்களையும் அடக்க விலைக்கு வெளியிட்டுப் பரப்பிய பெருமை இதனைச் சார்ந்ததேயாகும். மேலும் அவ்வவ் விடங்களில் நம் சமய சம்பந்தமாய சொற்பெருக்காற்றல், கோடை வகுப்பு நடத்துதல், மக்களுக்குச் சமய உண்மைகளை விளக்கியுரைத்தல் முதலிய பல்லாற்ருனும் தொண்டுகள் பல புரிந்து வருகின்றது. இப்படி இருப்பினும் இன்னும் நம் தமிழகத்தைப் பொறுத்த வரையிலாவது பலர் நம் சைவ சித்தாந்தக் கொள்கையைத் தெரிந்து இருக்கின்றனரோவெனில் இல்லை. இதற்குக் காரணம் என்னையோவென்று ஆராய்ந்து தக்க வழிநாடிப் பரப்ப வேண்டுவது, நமக்குரிய தற்போதைய இன்றியமையாத கடனுகும்.

கிறித்துவ சமயம் உலகம் முழுவதும் பரவிய ஒரு சமயமாகும். பல சங்கத்தவர்களாகப் பிரிந்து நின்று அவ்வவ் விடங்களில் அவர்கள் சமய உண்மைகளைப் பரப்பி வருகின்ருர்கள். அவர்கள் சமயத்தைப் பற்றிப் பேசுவதும் அதிகம். அதைவிடச் சமயத்தைப் பற்றிய ஆக்கவேலையாகச் செயல்முறையி லீடுபடுவது இன்னும் அதிகம் ஆகும். அவை அனுதைகள் விடுதி, விதவைகள் விடுதி, பள்ளிகள் அமைத்துச் சமய உண்மை பரப்பல், துண்டு வெளியீடுகள் மூலம் சமய உண்மைகளை விளக்கல், சிறு சிறு நூல்கள்மூலம் சமய உண்மைகளை விளக்கல், பெரு நூல்கள் பல எழுதியும் சமய விளக்கம் பெறல் என்பனவாம். அந்நூல்கள் எளிமையாயும், கவர்ச்சிகரமாயும், பாமரனும் எடுத்துக் கூறத்தக்க நிலையிலும் இருக்கின்றன. இவைகளில் எல்லாம் நம் சமாஜமும் பெரும் பான்மையாக ஈடுபடவேண்டும். அத்தகைய தொண்டுகள் செய்ய நம் நாட்டில் வாய்ப்புகள் உள்ளன. ஆனல் செயல்முறைத் தொண்டர்கள் தேவை. அண்மையில் ஒரு பெரியாரைச் சந்தித்தேன். அவர் பணத்தைப் பற்றிக் கவலையில்லை. தொண்டுசெய்ய ஆளில்லையே என உருகினர். அவ்வாறு தொண்டு செய்வதற்கு நெஞ்சுறுதி வேண்டும். நெஞ்சுறுதிகொள்ளச் சமய அறிவில் உறைப்பு வேண்டும். அவ்

வுறைப்புக்கு அடிப்படையா யமைவது சமய விளக்க வெளியீடுகளாம். நாம் இத்தகைய வெளியீடுகளைப் பற்றிய செயல்களில் இதுகாறும் முனையவேயில்லை. தற்போது தான் 'அறப் பயிற்சி மாலை' என்ற ஒரு நூல் சமாஜ வெளியீடாக வெளிவந்துள்ளது. இதுபோன்று இன்னும் பல நூல்களையும் வெளியிடச் சமாஜம் துணிந்துள்ளது. இதனைப் பள்ளி மாணவர்கள்மூலம் சமய விளக்கத்தைப் பற்றிய அறிவைப் பரப்ப வேண்டுமென்ற கொள்கையுடனேயே வெளியிட்டுள்ளோம்.

நம் தமிழ் நாட்டில் 1958-ஆம் ஆண்டுக் கணக்குப்படி மொத்தம் 1131 உயர்நிலைப் பள்ளிகளுள்ளன. அவைகளுள் (Missions) தாபனங்கள் நடத்தும் பள்ளிகள் 207; தனிப்பட்டோர் (Private) நடத்தும் பள்ளிகள் 326.

இந்துத் தாபனங்கள் 13 பள்ளிகளையும், கிறித்துவத் தாபனங்கள் 194 பள்ளிகளையும் நடத்துகின்றன. தனிப் பட்டோர் நடத்தும் பள்ளிகளில் சமயச் சார்பாகச் சிறிது ஊக்கம் தரத்தக்கவர்கள் என்று பொறுக்கி எடுத்தவை 34. சமயச் சார்புக்கு ஊக்கம்தராத பள்ளிகள் மீதி 292 ஆகும்.

இந்நிலையில் சமயப்பற்றுள்ள 47 பள்ளிகளுள் 35 பள்ளிகளுக்கு அறப் பயிற்சி மாலை அனுப்பப்பட்டது. அவைகளுள்ளும் 4 பள்ளிகளே இந்நூலை வரவழைத்துத் தங்கள் பள்ளி மாணவர்களுக்குப் பயன் படுத்துகின்றனர். அவற்றுள்ளும் முதலிடம் பெறத்தக்கது, சிதம்பரம் ஆறுமுக நாவலர் உயர்நிலைப் பள்ளியேயாகும். நாவலர் பெருமானின் கொள்கைக்கேற்ப அவர்கள் ஏராளமாக நூல்களைத் தருவித்து ஒவ்வொரு மாணவனும் பயன் பெறும்படி செய்கின்றனர். இதுபோன்று ஊக்கம் இருப்பின் நம் சமயம் தாழ்நிலை பெறுமா? அத்தகைய ஊக்கநிலை இல்லையே என்றுதான் வருந்தவேண்டி யுள்ளது.

ஆகவே அறப் பயிற்சி மாலையைச் சைவ சித்தாந்த விளக்கம் வேண்டியவர்கள், பற்றுள்ளவர்கள், அவரவர்கள் நடத்தும் பள்ளிகளில் போதிக்கச்செய்து நம் வருங்கால மாணவச் செல்வங்களைச் சிறந்த சிலர்களாக்க முனைவார்களாக. சிறப்பாக நம் சைவாதீனங்கள் நடத்தும் பள்ளிகளுக்கும் வேண்டுகோள் விடுத்திருக்கின்றோம். அவர்கள் இதில் சிறிது நாட்டம் செலுத்துவார்களாயின்

நன்மையாயிருக்கும். இஃது ஊதியம் கருதாத அடக்கவிலைப் பதிப்பு. விலை 50 புதுக்காசுதான். தனிப்பட்டோரும் வாங்கிப் பயன் பெறுவார்களாக.

---

# கொடிக்கவி

(திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்.)

(மலர் - 34; இதழ் - 7; 272-ம் பக்கத் தொடர்ச்சி)

கொடிக்கவி, பஞ்சாட்சரப் பாசுரம் என்ற பெயரையும் கொண்டது என முன்னர்க் கூறியுள்ளோம். அதனை இந்நூலின் இரண்டாம் பாடலில் பஞ்சாட்சரக் குறிப்பு இருப்பது கொண்டு உணர்ந்தோம். ஆண்டு அக் குறிப்பு ஊன்றி நோக்கும்போது புலனாவது. இதுபோது எடுத்துப் பேசப்படும் நான்காவது பாடல் ஐந்தெழுத்தின் மாண்பினை நன்கு எடுத்து வெளிப்படையாகக் காட்டி நிற்கின்றது. இனி எவ்வெம் முறையில் அப் பஞ்சாட்சரம் கூறப்பட்டுள்ளது என்பதைச் சிறிது கவனிப்போமாக.

நமது இந்து சமயத்தில் பலப்பல மந்திரங்கள் உள்ளன. அம்மந்திரங்கள் ஒவ்வொன்றும் ஆற்றல் மிக்கனவே. அம் மந்திரங்களுள் சிலவற்றை எடுத்துக் கூறுவோமானால் அஷ்டாட்சர மந்திரம், சடாட்சர மந்திரம் என்று கூறலாம். இத் தொடர்களின் பொருள் முறையே எட்டெழுத்தால் ஆன மந்திரம், ஆறெழுத்தாலான மந்திரம் என்பது. எட்டெழுத்து மந்திரமாவது "ஓம் நமோ நாராயணாய" என்பது. இதில் எட்டு எழுத்துக்கள் இருப்பதைக் காண்க. (ஓம் ஓர் எழுத்தாகக் கொள்ளவேண்டும்.) ஆறு எழுத்து மந்திரமாவது "ஓம் குகாய நம" என்பது. இதிலும் ஆறு எழுத்துக்கள் இருப்பதைக் காண்க. இந்த எட்டு எழுத்துக்களும், ஆறெழுத்துக்களும் சேர்ந்தபோதே ஆற்றல் மிக்க மந்திரமாகிறது. இவ்வெழுத்துக்கள் ஒன்று கூடியபோதுதான் பொருளும் தெரியவருகிறது. தனித்தனி எழுத்தாக எடுத்துப் பொருள் காணலுறின் பொருள் யாதும் புலப்பட்டிலது. மேலும் "ஓம்" என்னும் ஓர் எழுத்து மந்திரத்தை உடன் சேர்த்தால்தான் மந்திரம் என்னும் பெயர்க்கும் உரியனவாக அஷ்டாட்சரம், சடாட்சரம் திகழ்கின்றன. இவ்வுண்மைகளை எவரும் மறுக்க முடியாது. இஃது உள்

ஐந்தெழுத்து மாண்பு

கறிந்த உண்மையாகும். இந்த நிலையில் பஞ்சாட்சர மந்திரத்தைப்பற்றிச் சிறிது ஆய்தல் இன்றியமையாததாகும்.

பஞ்சாட்சர மந்திரமாவது ஐந்தெழுத்தால் ஆகிய சிவய நம என்பதாகும். இந்த மந்திரத்தில் ஐந்து எழுத்துக்கள் இருப்பதைக் காண்க. இந்த மந்திரம் ஏனைய மந்திரங்களைப் போன்றது அன்று. உண்மை; முற்றிலும் உண்மை. ஏனைய மந்திரங்களின் எழுத்தைப் பிரித்துப் பிரித்துத் தனித்தனிப் பொருளைக் காணும்போது பொருள் புலப்படாது இருத்தலை முன்னர் எடுத்துக் காட்டினேம். ஆனால் இந்தப் பஞ்சாட்சர மந்திரத்தில் உள்ள ஒவ்வோர் எழுத்தையும் எடுத்துக் காணும்போது, ஒவ்வோர் எழுத்தும் தன்னிடத்தில் ஒரு பொருட்சிறப்பைக் குறிக்கும் நிலைக்களனாக உள்ளது என்பது தெள்ளத் தெளிந்த உண்மையாகும். சி என்பது சிவ பரம்பொருளையும், வ என்பது சிவ சத்தியையும், ய என்பது ஆன்மாவையும், ந என்பது மூல மலத்தையும், ம என்பது ஆகந்துக மலத்தையும் குறிக்கும் குறியாகும். இது குறித்தே சுந்தரர் "அந்தியும் நண்பகலும் ஐந்துபதம் சொல்லி என்றனர்." இதனால் ஒவ்வோர் எழுத்தும் ஓர் எழுத்து ஒருமொழி. ஓர் எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின் பதமாம் என்பது இலக்கணம். இவ்வாறு அட்டாட்சரம், சடாட்சரம் மந்திரங்களில் எடுத்துக்காட்ட இயலுமோ? அன்பர் நீர் ஓர்ந்து உம் விடையினைக் கூறுங்கள். வேண்டுமானால் வலிந்து சிலபொருள்களைக் காட்டலாமாயினும் இம் மந்திரம் போல் ஒப்புயர்வற்ற உள்ள உண்மையினை மறைக்க ஒண்ணாப் பொருளைக் காட்ட ஒண்ணுமோ? மேலும், ஏனைய மந்திரங்கட்கு ஓம் என்னும் ஏகாட்சரம் இன்றியமையாது வேண்டப்படுதல்போல இப் பஞ்சாட்சரத்திற்கு இது வேண்டப்படுதல் இல்லை. இது ஒன்றே பிரணவமாம், ஓம் இன்றித் திகழ வல்லது. ஆக இம் மந்திரம் மந்திரங்களுள்

பஞ்சாட்சர மாண்பு

தலைசிறந்த மந்திரமாகும். வேத நான்கினும் மெய்ப்பொருளாகவும் விளங்குவதும் இதுவே. இதுவே நலங்கொள் நாமம். மந்திர நான்மறை ஆகி வானவர் சிந்தையுள் நின்று அவர் தம்மை ஆள்வது, செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரமாவது. எல்லாவற்றிற்கும் ஐந்தெழுத்துக்களே

காரணம். இறைவன் திருமேனி ஐந்து எழுத்தையே குறிக்கும்.

" சேர்க்கும்' துடிசிகாம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகாம்—பார்க்கில் இறைக்கு
அங்கிநகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகாமது தான் "

என்ற உண்மை விளக்கப் பாடலைக் காண்க. அவனது கூத்தும் ஐந்தெழுத்துக் குறிப்பையே காட்டுவது.

" ஆடும் படிகேள் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியிலே நகரம்—கூடும்
மகாம் உகாம் வளர்தோள் சிகாம்
பகருமுகம் வாமுடியப் பார் "

என்பதும் உண்மை விளக்கமே. 'சிவாய நம என்னும் திரு எழுத்தஞ்சாலே அபாயமற நின்றுடுவான்' என்றும் கூறியுள்ளனர்.

நம் உடல் அமைப்பும் ஐந்தெழுத்துக் குறியாகும்.

" நவ்விரண்டும் காலதாய் நவின்றமவ் வயிறதாய்ச்
சவ்விரண்டும் தோளதாய்ச் சிறந்தவவ் வுவாயதாய்
யவ்விரண்டு கண்ணதாய் எழுந்துநின்ற நேர்மையின்
செவ்வினத்து நின்றதே சிவாய அஞ்செழுத்துமே "

என்பர் சிவவாக்கியர். கையில் உள்ள ஐந்து விரல்களும் ஐந்தெழுத்தைக் குறிப்பன என்றே சம்பந்தர் "அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே" என்றும் பாடியுள்ளனர். "அம்பலம் ஆவதும் அஞ்செழுத்தாமே." ஐம்பதெழுத்தே அஞ்செழுத்தாமே என்றும் கூறியதோடு இன்றித் திருக்கோயிலும் பஞ்சாட்சர வடிவமே என்பதைத் திருமூலர்,

" கோயிலும் அஞ்சன கோபுரம் மூன்றன
கோயில் அடைக்கக் கதவோர் இரண்டுள
கோயில் திறந்து கும்பிட வல்லார்க்குக்
கோயிலுக் குள்ளே குடிஇருந் தானே "

என்றும், " ஆலயமாக அமைந்த பஞ்சாக்கரம் " என்றும் கூறிப்போந்தார். எல்லாம் ஐந்தெழுத்தே என்பதை வெகு தெளிவுற உண்மை விளக்கப்,

" அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும்" என்கிறது.

ஐந்தெழுத்தாகிய பஞ்சாட்சரம் பதி பசு பாசம் ஆகிய முப்பொருளையும் உணர்த்தி நிற்கிறது. சிவ என்பது பதியையும், ய என்பது பசுவையும் நம என்பது பாசத்தையும் உணர்த்தும் ஆற்றைக் காண்க. திருமூலர் திருவாக்கினைக் கொண்டும் இதனை நிறுவலாம்.

" சிவன் அருளாய சிவன் திருநாமம்
சிவன்அருள் ஆன்மாத் திரோதம் மலம்மாயை
சிவன் முதலாகச் சிறந்த நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே "

என்றனர். இக்கருத்தையே உண்மை விளக்கமும் "சிவன் அருள் ஆவி திரோதமலம் ஐந்தும், அவன் எழுத்து அஞ்சின் அடைவாம்" என்கிறது.

இந்தப் பஞ்சாட்சரம் தூல பஞ்சாட்சரம் சூட்சும பஞ்சாட்சரம், அதிசூக்கும பஞ்சாட்சரம் என்றும் கூறப்படும். இவற்றுள் நகரத்தை முதலாகக்கொண்டு உச்சரிக்கப்படுவதான நமசிவய என்பது தூல பஞ்சாட்சரம். சிகரத்தை முதலாகக்கொண்டு ஓதப்படுவதான சிவயநம என்பது சூட்சும பஞ்சாக்கரம். சிவயசிவ என்பது அதிசூக்கும பஞ்சாட்சரமாகும். இதனை முத்தி பஞ்சாட்சரம், காரண பஞ்சாட்சரம், ஸ்ரீ பஞ்சாட்சரம் என்றும் கூறுவர்.

பஞ்சாட்சர வகை

சிற்சில சமயங்களில் இந்தப் பஞ்சாட்சரம் எட்டெழுத்தாகவும், ஆறெழுத்தாகவும், நால் எழுத்தாகவும், துலங்கும். எட்டெழுத்தாக இலங்கும்போது ஓம், ஆம், அவ் சிவாயநம என்றும், ஆறெழுத்தாக விளங்கும்போது ஓம் சிவாயநம என்றும், நாலெழுத்தாக உச்சரிக்கப்படும்போது ஓம் சிவாய என்றும் கூறப்படும். என்றாலும் இங்குக் கூறப்பட்ட மந்திரங்கள் ஐந்தெழுத்தின் சொரூபத்தை உள்ளடக்கிய குறிப்பினை யுடையனவே. எவ்வளவு கூட்டியும் குறைத்தும் கூறப்பட்டாலும் என்றும் உள்ள எழுத்து இரண்டாகும். அவையே சிவ என்பன. இவை முறையே பெருவெழுத்தப் பிஞ்செழுத்தென்றும், பேசா எழுத்துப்

பேசும் எழுத்து எனவும் கூறுவர். எட்டெழுத்து மந்திரமாக அ, உ, ம் சிவாயநம என்றும், ஆறு எழுத்து மந்திரமாக ஓம் சிவாயநம என்றும் நாலெழுத்து மந்திரமாக சிவசிவ என்றும் கூறுவதுண்டு.

சி சிவத்தையும் வ சத்தியையும் குறிக்கும் என்று முன்பே உணர்ந்துள்ளோம். இதனுல் இவ்விரண்டும் பிரிக்கமுடியாத பொருள் என்பது அறிகிரேும். இதனுல்தான் திருமூலர் " ஈர் எழுத்தாலே இசைந்தங்கு இருவராய் " என்றும், "அண்ணல் இருப்பது அவன் அக்கரத்துள்ளே பெண்ணின் நல்லாளும் பிரான் அக்கரத்துள்ளே " என்றும் கூறியுள்ளார்.

சிவ

மணிமொழியாரும் இந்தக் கருத்தை அழகுற "உடையாள் உன்தன் நடு இருக்கும் உடையாள் நடுவுள் நீ இருத்தி " என்று அருளிப் போயினர். இந்த ஈர் எழுத்தின் குறிப்பே திருக்குறளின் முதல் இரு அதிகாரங்கள் ஆகும். கடவுள் வாழ்த்துச் சிகர எழுத்தாம். சிவத்தைப் பற்றியும், வான் சிறப்பு வகர எழுத்தாகிய அருட்சத்தியைப் பற்றியும் ஆகும். அருட் சத்திதான் மழை என்பது தத்துவஞானிகளின் துணிபு. "தானே மழைபொழி தையலும் ஆய் நிற்கும் " என்றனர் திருமூலர்.

குறள் கூறுவதும் சிவ

இன்னேரன்ன சீரும் சிறப்பும் வாய்ந்த ஐந்தெழுத்தே ஆன்மா உய்தி பெறுதற்கு உறுதுணையாவது. இக்கனியை அறிந்து இதயத்தில் வைத்துத் தியானித்தல் வேண்டும். இதனையே தேனித்தல் என்பர் மணிமொழியார்.

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வேறிருந்து உன் திருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடும் தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனே நம்பி இனித்தான் நல்காயே

என்ற வாசகத்தால் உணரலாம். இவ்வைந்தெழுத்துத் தேனிக்கத் தேனிக்க இன்பமூட்டும் என்பதைத் திருமூலர்,

" ஒன்று கண்டீர் இவ்வுலகுக் கொருகனி
நன்று கண்டீர் அது நமச்சி வாயக்கனி
மென்று கண்டால் அதுமெத்தென் றிருக்கும்
தின்று கண்டால் அது தித்திக்கும் தானே " என்றனர்.

இறைவன் திருமேனி பஞ்சாக்கரம் ஆதலின், அவ்விறைவனை அவனது திருமேனியாகிய பஞ்சாட்சரத் தியானத்தை நாம் கைக்கொள்ள வேண்டியது நமது கடமை. தான் ஐந்தெழுத்தாக இருந்து அருள் நல்கும் நிலையில் இருக்கின்ற காரணத்தால் உயிர்கட்கும் பஞ்சாட்சர வடிவம் தந்து, தன்னை நினைப்பித்து அருள் கூடும்படிச் செய்கின்றான். பட்டினத்தடிகளார் இம்மந்திரத்தை இடைவிடாது ஓதினல் முத்தியாகும் என்பதை "மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த முத்தியும் இழந்திலம் பெரும" என்றனர். இடைவிடாது உச்சரித்தவண்ணம் இருக்கவேண்டும் என்ற கருத்தில்தான் "நற்றவா உனைநான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே" என்றனர் நம்பி ஆரூரர்.

"விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்ற கட்டளை சிவஞானபோதம் கூறுவதும் இது பற்றியே என்க. மேலும் இதனை நன்கு தெளிவிக்கும் முறையில் அந்நூல் "அஞ்செழுத்தால் உள்ளம் அரன் உடைமை கண்டு அரனை, அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில்" என்றும் ஆணை இடுகிறது.

நமசிவய என்பது தூல பஞ்சாட்சரம் என்று முன்பு கண்டோம். நாம் இருக்கும் நிலை இன்னது என்பதை நினைவூட்டுவதுதான் தூல பஞ்சாட்சரத்தின் குறிப்பு. மறைமுகமாக உதவி ஆற்றுவது நகரம். குற்றத்தில் சிக்கியுள்ளோம் என்பதை உணர்த்துவது மகரம். நான் (இறைவன்) இத்தகையவன் என்பதன் குறிப்பு சிகரம். உன்மீது இரக்கம் (சத்தி) உள்ளது என்பதன் நினைவு வகரம். "நல்லாரை" சாராத நீயாரைச் சார்ந்துள்ளாய் நீ (ஆன்மா) என்பதை உணர்த்துவது யகரம்.

இந்தத் தூல பஞ்சாக்கரமே முதல் முதல் ஓதுதற்கு உரியது. இதனைத் தீட்சை பெறுதவர்களும் ஓதலாம்.

தூல பஞ்சாட்சரம் முன் ஓதுக

இதனால்தான் திருமூலர் முன்னர் ஓதுக நம என விளம்புறு மொழியைப் பின்னர் ஓதுக சிவாய என்றிங் கனம் பிறங்கும்" என்றனர். இதனை இடைவிடாது உச்சரிப்பதால் ஆன்மா மயக்கமும் மலமும் நீங்கிக் குருவருள்வழி நிற்கும் நிலை உண்டாகும். அதுபோது

திருவருள் கூடும். அவரே சூட்சும பஞ்சக்கரமாகிய சிவய நம என்பதை உபதேசிப்பர். இதனைத்தான் குதூகலத்துடன் மணிமொழியார், "நானேயோ தவம் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன்" என்றும், இவ்வுபதேசத்தை இறைவன் வந்து அருள் செய்ததை "தானே வந்து அடியேற்கு அருள் செய்தான்" எனவும் பாடியுள்ளார். சிவாய நம என்பதில் முன்னர் முனைத்து நின்ற மலக்குறிப்பாகிய நம என்பது பின்னர் தள்ளப்பட்டதையும் யகர உயிர் அருளாம் வகரத்தைஅண்டிக்கிடப்பதையும் (குருவருள் வழி ஒழுகல் என்பது) இவ்வருள் வழி சிகரமாய் சிவப்பேறு கிட்டியதையும் உணரலாம்; இந்த சூட்சும பஞ்சாட்சர வடிவையும் பயனையும் உண்மை விளக்கம்,

பின் சூட்சும பஞ்சாட்சரம்

"சிவன் அருள் ஆவி திரோதமலம் ஐந்தும்
அவன் எழுத்து அஞ்சின் அடைவாம்—இவைநின்ற
நம்முதல், ஓதில் அருள்நாடாது நாடும் அருள்
சிம்முதலா ஓது நீசென்று"

சிவய நம பயன்

என்று எடுத்துக் காட்டுகிறது.

இதனால்தான் பின்னர் ஓதுக சிவாய என்று இங்ஙனம் பிறங்கும். "அன்ன அஞ்செழுத்தாகிய மந்திர அரசை" என்றனர் திருமூலர். இந்தக் குறிப்பை எல்லாம் ஞானசாரியனே உணர்த்த வல்லவன் என்ற உண்மையினை நெஞ்சுவிடுதூது "அஞ்செழுத்து உள்ஈடு அறிவித்தான், அஞ்செழுத்தை உச்சரிக்கும் கேண்மை உணர்த்தினன்" என்கிறது.

ஓதும் முறை உணர்த்தல்

சிவய சிவ என்பது அதிசூக்கும பஞ்சாட்சரம் அல்லவா? இதன் பொருள் "உயிர் பாசத்தை நீக்கி அறிவுக் கண்ணால் பதியை நாடுதல்" என்பதாம். "அருளினால் வாசி இடை நிற்கை வழக்கு" என்பது திருவருட்பயன். இங்கு யகர உயிர் பாச எழுத்தை நீக்கிப் பதி எழுத்தாம் சிகரத்துடனும் அருள் எழுத்தாம் வகரத்துடனும் நிற்றல் காண்க. இந்த நிலையை விரும்பியே மணிமொழியார் "உடையாள் உன்தன் நடு இருக்கும் உடையாள் நடுவுள் நீ இருத்தி அடியேன் இருவிருள்

இது பாசத்தை நீக்கியே விடுதல்

இருப்பது" என்று அருளிப் போந்தார். பாச எழுத்தை நீக்கி அருள் எழுத்தோடும் பதி எழுத்தோடும் உயிர் எழுத்து நிற்றல் என்பது இதன் பொருள். மணிமொழியார் "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்" என அருளினர் அல்லரோ? இதனை அதிபக்குவிகட்குப் பரமாசாரியர்களே உபதேசித்தல் வேண்டும்.

பிஞ்சுமுதிர்ந்து கனியாகிறது. ஆகவே அருளாம் வகாரம் பிஞ்செழுத்தாயிற்று. சிகரமாகிய சிவம் எவற்றிற்கும் அடிப்படை ஆதலின், பெரு எழுத்தாயிற்று. இந்த இரண்டும் சேர்ந்ததே சிவ என்பது. பேசும் எழுத்து வகாரம், பேசா எழுத்துச் சிகரம். ஆக இதுவும் சிவ என்பதே. இந்தச் சிவசிவ மந்திரம் மகத்தான பலனைத் தர வல்லது. இதனை

**சிவமாண்பு**

"சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்,
சிவசிவ என்னச் சிவகதி தானே"

என்ற பாடலால் உணரலாம்.

இன்னோரன்ன சிறப்பு இம்மந்திரத்தில் இருப்பதைக் காட்டவே கொடி கட்டுவதாகக் கூறுவார்போல்,

"அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும்—நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமல் காட்டக் கொடி" என்று பாடி யருளினர்.

இந்நூல் பஞ்சாட்சரப் பாசுரம் உரைக்கும் நூல் என்பது இப்பாட்டைக்கொண்டு நன்கு தெளியலாம். இத்

**கொடி தடைபடக் காரணம்**

தகைய உண்மைகளை உலகம் உணரும் பொருட்டே கொடி ஏருதவண்ணம் செய்து பின் உமாபதி சிவாசாரியாரைக் கொண்டு ஏற்றி இப்பொருள் பொதி பாடல்களைப் பாடுமாறு இறைவன் திருவுளம் கொண்டனன் என்க.

"திருவார் கயிலைத் திருநந்தி தேவர் திருமரபில்
வருமாசிரியன் மறைஞான சம்பந்தமா குரவன்
அருள்சார் உமாபதி தேசிகன் செஞ்சாலும் புயமென்
மருவார் மலரினை உள்ளி வழுத்தி வணங்குதுமே."

———

# பதிப்புரை*

தமிழ்மொழியில் மெய்யறிவு (தத்துவம்)த்துறையில் பல நூல்கள் உண்டு. சுருங்கக்கூறின் மெய்யறிவு நூல்களே தமிழ் இலக்கியத்தில் அதிக இடம் பெற்றிருக்கின்றன எனலாம். தமிழ்மொழியில் மெய்யறிவுக்கருத்து வளர்ந்த நெறிமுறைகளை, மெய்யுணர்வு நூல் படிக்கப்புகும் மாணவர்க்கு உறுதுணையாக வரலாற்றை ஒட்டி, ஒருங்கே தொகுத்து உணர்த்த வேண்டுவது இன்றியமையாததாகிறது. தமிழ் நாட்டில் சிறப்பாக வழங்கும் தத்துவக்கருத்துக்கள் நான்கு. அவை (1) சங்கரர் அறிவித்த அத்வைதம், (2) உடையவர் என்னும் இராமானுசர் விளக்கிய விசிஷ்டாத்வைதம், (3) மத்வாச்சாரியார் காட்டிய துவைதம், (4) மெய்கண்டார் புகன்ற சைவ சித்தாந்தம் என்பன. இவைகளில் மத்வர் கொள்கையை விளக்கத் தமிழ் நூல்கள் எழுதப்படவில்லை. சங்கரர் கொள்கைக்கு மூலநூல்கள் வடமொழியில் உள்ளன. உள்ள தமிழ் நூல்களும், வடமொழி நூல்களை மொழி பெயர்த்தும், தழுவியும் வந்தவையே. விசிஷ்டாத்வைதக் கொள்கையை விளக்குவனவும் பெரிதும் வடமொழி நூல்களே. ஓரளவு தமிழ் நூல்களும் உண்டு. இவையும் பெரும்பாலும் வடமொழியில் வகுக்கப்பட்ட மூலங்களையும் விரிவுரைகளையும் தழுவியவையே; மேலும் மணிப்பிரவாள நடையில் அமைந்தவை. அவைகள், படிப்பதால் மட்டுமே அறியக் கூடியனவன்று. அவைகள் சிறப்பாகக் கேட்டல் வழியாக மரபை ஒட்டியே வளர்ந்து வந்திருக்கின்றன. ஆனல் சைவ சித்தாந்தத்தை விளக்கும் நூல்கள் வளமார் தமிழில் இனிய நடையோடு உயர்ந்த கருத்துக்களைத் தாங்கி மிளிர்கின்றன. இவற்றைத் தமிழர் படித்து மகிழ

*சைவ சித்தாந்தக் கட்டுரைகள் – சிறு நூல்கள், முன்னர் 'சித்தாந்தம்' இதழ்களில் வெளிவந்துள்ளன. அவற்றைத் தொகுத்து அச்சிட்ட நூலின் பதிப்புரை இது. விலை ரூ. 2/-. கிடைக்குமிடம் :—பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1.

லாம். ஆனால் செவிவழிக் கேட்டுவந்த நுண்ணிய கருத்துக்கள் நாட்டில் மறையும் நிலையிலிருக்கின்றன. சித்தாந்தத் தத்துவநூல்களின் வளர்ச்சிக்குத் திருமடங்களே தாயகமாயிருந்தன. பல மடங்களின் கால்வழியில் வந்த ஞானாசிரியர்களும், அவர்களின் மாணவர்களுமே இத்துறை நூல்களுக்கு ஆசிரியர்களாக விளங்குவதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

தமிழ் நாட்டில் சங்கரர் கொள்கைக்குப் பெரிதும் வழிமுறையாகப் பயின்று வரும் நூல்கள் வருமாறு: (1) ஞான சிவவாதக் கட்டளை (காளத்தி, சேஷாத்திரி சிவனார்), (2) கீதாசாரத் தாலாட்டு (ஆமாத்தூர் வேங்கடநாதர்), (3) சசிவர்ண போதம் (இது மோகவதைப் பரணியின் ஒரு பகுதி), (4) மகாராஜா துறவு (திருமுதுகுன்றம், குமார தேவர்), (5) வைராக்கிய சதகம், (6) வைராக்கிய தீபம் (5, 6 பேரூர்ச் சாந்தலிங்க அடிகள்), (7) இலக்ஷணாவிருத்தி (பிரம்ம நாமாவலி, இது வடமொழியில் சங்கரர் அருளியதைக் காரைக்குடியை அடுத்த கோவிலூர் மடம் சிதம்பர ஞானதேசிக சுவாமிகள் மொழிபெயர்த்தது), (8) வேதாந்த சூடாமணி (இது கன்னட மொழியில் நிஜகுண யோகீசுவரர் அருளிய விவேக சிந்தாமணியின் வேதாந்த பரிச்சேதத்தின் தமிழ் பெயர்ப்பு, - துறைமங்கலம் சிவப்பிரகாசர்), (9) கைவல்ய நவநீதம் (நன்னிலம் தாண்டவராய சுவாமிகள்), (10) விவேக சூடாமணி (உலகநாத சுவாமிகள்), (11) அஞ்ஞவதைப்பரணி, (12) பஞ்சதசி (நித்தியானந்தர்), (13) ஈசுவரகீதை, (14) பகவத்கீதை (சேமநகர் பட்டர்), (15) பிரமகீதை (3, 11, 13, 15 நூல்களின் ஆசிரியர் சிதம்பரத்தை அடுத்த எறும்பூர்த் தத்துவராய சுவாமிகள்), (16) ஞானவாசிட்டம் (ஆளவந்தார்).

இவற்றில் 7, 8, 10, 12 முதல் 16 ஆகியவை மொழிபெயர்ப்பு நூல்கள். இந்நூல்களே தமிழ்நாட்டில் சங்கரரின் அத்துவைதம் படிப்பதற்குப் பயன்பட்டு வருபவை.

இந்நூல்களைப் படிப்பதற்கு முன்படியாக 9 நூல்களடங்கிய "வேதாந்தக் கட்டளைகள்" என்ற சிறுதொகுப்பு நூல் பயிலப்பட்டு வருகிறது. அவை (1) நாஞசிவவாதக் கட்டளை, (2) ஞானக் கட்டளை, (3) தத்துவாந்தக் கட்டளை, (4) வேதாந்த தத்துவக் கட்டளை, (5) வேதாந்த தச அவத்தைக் கட்டளைச் சுருக்கம், (6) வேதாந்த தசகாரியக் கட்டளை, (7) உபதேச சித்தாந்தக் கட்டளை, (8) உபதேச உண்மைக் கட்டளை, (9) பிரமோபதேசக் கட்டளை என்பன. இவை சைவ சித்தாந்தக் கட்டளைகளுக்கு வேருனவை. இவற்றை 1914-ல் ரிப்பன் அச்சகத்தார் வெளியிட்ட கட்டளைப் பிரபந்தத்தில் காணலாம். இந்நூல்களின் ஆசிரியர்களில் குமார தேவரும் துறைமங்கலம் சிவப்பிரகாசரும் வீரசைவ மரபினராவர். அத்துவைதக் கொள்கையில் சேர்ந்த பலர், பின்னர் வீரசைவராக ஆயினர் என்பதற்கு, மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பெருந்திரட்டு ஏட்டில் குறிப்பு இருக்கிறது.

இனி, அடுத்து உடையவர் வகுத்த விசிஷ்டாத்வைதக் கொள்கைக்கு மறைவாகக் கேட்டு உணரத்தக்க 18 வைணவ மணிப்பிரவாள உரைநடை நூல்கள் உண்டு. இவற்றின் ஆசிரியர் பிள்ளை லோகாசாரியார். அவை அஷ்டாதச ரகஸ்யங்கள் என வழங்கும். அவை வருமாறு:

(1) முமுக்ஷுப்படி: மந்திரங்களின். (திருமந்திரம், துவயம் சரம சுலோகம்) விளக்கவுரை.

(2) தத்வத்திரயம்: தத்துவங்களாவன சித்து, அசித்து, ஈசுவரன் பற்றி வைணவ சமயப்படி கூறுவது.

(3) அர்த்தபஞ்சகம்: இறைவன் இயல்பு, உயிர் இயல்பு, உயிர் இறைவனை அடையாமல் தடுத்து நிற்கும். வினை இயல்பு, அத்தடையைப் போக்கி இறைவனை அடைவதற்குரிய உபாயத்தின் இயல்பு, இறைவனை அடைந்த பெரும்

பயன் என்ற 5 கருத்துக்களை வீடுபேற்றை விரும்புவோர் அறியவேண்டி விளக்குவது.

(4) ஸ்ரீ வசன பூஷணம்: வேதம், ஆழ்வார் அருளிச் செயல்கள், பூர்வ ஆச்சாரியர் ஒழுக்கங்கள் இன்ன பிற வற்றிலிருந்து அறிதற்கு உரிய நுண் பொருள்களைத் தொகுத்து உரைக்கின்ற சிறந்த நூல்.

(5) அர்ச்சிராதி: வீட்டு உலகை அடையும்போது வைணவர்கள் செல்லும் வழி, ஆங்காங்கு எய்தும் சிறப்புக் கூறுவது.

(6) பிரமேய சாகரம்: இறைவன் அருள் தொடங்கி வீடுபேறு ஈறாக உய்தற்கு உரிய மக்கள் அடையும் நிலைமை களைக் கூறுவது.

(7) பிரபந்த பரித்ராணம்: வீடு பேற்றிற்கு, தன் முயற்சியை விட்டு இறைவனையே தஞ்சமாக அடைந்த ஒரு வனுக்கு, இறைவனைத்தவிரப் பிறர் எவரும் காப்பாளர் ஆகார் என்பதை விளக்குவது.

(8) சார சங்கிரகம்: திருவாய் மொழியின் பத்துப் பகுதிகளுக்கு துவயமந்திரத்தின் பத்துப் பொருள்களை அமைத்துக் கூறுவது.

(9) சம்சார சாம்ராஜ்யம்: உடம்பை இராஜ்ய மாக வும், அறியாமை முதலிய தீக்குணங்களை அங்கங்களாகவும், உயிரை அரசனாகவும் உருவகப் படுத்திக் கூறி, பின்னர் உயிர் நல்வழி அடையும் வழியைச் சொல்வது.

(10) நவரத்னமாலை: இறைவன், அடியார், உலக மக்கள், பிறர் இவர்களை எவ்வாறு கருத வேண்டும் என்பது பற்றி 9 கருத்துக்களைக் கூறுவது.

(11) நவவித சம்பந்தம்: கடவுளுக்கும் உயிர்க்கும் உள்ள 9 வகையான தொடர்புகளை எட்டு எழுத்து மந்திரம் காட்டிக் கூறுவது.

(12) யாத்ருச்சிகப்படி.

(13) பரந்தபடி.

(14) ஸ்ரீய: பதிப்படி : இவை 3-ம் மேற்காட்டிய 3 மந்திரங்களைப் பற்றிக் கூறுவது.

(15) தத்வசேகரம் : வேதம் முதல் பல நூல்களில், திருமாலே முழுமுதற் கடவுள் என்பதற்கு மேற்கோள் காட்டி நிறுவுவது.

(16) தனித்துவயம் : (17) தனிச்சரமம் : (18) தனிப் பிரணவம் : இவை 3-ம் முறையே துவயமந்திரம், சரம சுலோகம், பிரணவம் இவற்றின் விரிவுரை. 1, 2, 4 நூல்களுக்கு மணவாளமாமுனிகள் விரிவுரை உண்டு.

இந்த 18 நூல்களும் பெரிதும் தென்கலை வைணவர்களால் பயிலப்பட்டு வருவது. வடமொழிக்குச் சிறப்பிடம் கொடுத்துத் தமிழைத் தழுவிக்கொள்ளும் வடகலையினர் வேதாந்த தேசிகர் பிரபந்தத்தை ஒட்டிப் பயின்று வருவது பழக்கமாக இருந்து வருகிறது. (இதன் விரிவு ஸ்ரீ தேசிகப் பிரபந்த உரை. 1958 பதிப்பு பார்க்க).

சைவ சித்தாந்தத்தை வளர்த்த சுத்த சைவ ஆதீனங்கள் 18 என்பர். அவை பின் வருவன : (1) திருவாவடுதுறை (நமச்சிவாய தேசிகர்), (2) காஞ்சிபுரம் (ஞானப்பிரகாசர்), (3) தருமபுரம் (குருஞானசம்பந்தர்), (4) சூரியனார் கோயில் (சிவாக்கிரயோகிகள்), (5) சிதம்பரம் (ஆகமச் சிவப்பிரகாசர்), (6) பெருங்குளம் (திருநெல்வேலி மாவட்டம் - செங்கோல் மடம்), (7) மதுரை (ஞானசம்பந்தர்), (8) திருவண்ணமலை (குன்றக்குடி), (9) இராமேசுரம், (10) நீலப்பாடி, (தஞ்சாவூர் வட்டம்), (11) அன்னப்பன் பேட்டை (தாயுமான சுவாமிகள்), (12) திருச்சி (சார மாமுனி), (13) சொர்க்கபுரம் (அம்பர் மாகாளம்), (14) வேளாக்குறிச்சி (திருவாரூர் வட்டம் - திருப்புகலூர்), (15) சீர்காழி (வள்ளலார்), (16) வேதாரண்யம் (வருணை),

(17) நாச்சியார் கோயில் (குடந்தை வட்டம்), (18) திழா லூர் (மதுரை வட்டம் - கிரம்ப அழகிய தேசிகர்).

சைவ சித்தாந்தக் கொள்கைகள் கோயில் பூசை, தனிப் பட்டோர் தம்பொருட்டுச் செய்யும் பூசை இவைகளில் வைத்து இணைத்துத் தத்துவக் கொள்கையை விளக்கிக் காட்டுகின்றன. சிறப்பாக மேலே காட்டிய சங்கரர், இராமானுசர், மத்வர் கொள்கைகளுக்கு அடிப்படையான "பிரஸ்தானத் திரயம்" என்ற உபநிடதங்கள், பகவத்கீதை, பிரம சூத்திரம் மூன்றும் இதற்கு அடிப்படை நூல்கள். ஆனால் சைவ சித்தாந்தத்திற்கு அவை அடிப்படை நூல்கள் அல்ல. ஆயினும் அவைகளின் முரண்படாத உபநிடதப் பகுதிகளை இதற்குத் தழுவலாக அமைத்துள்ள, சைவ சித் தாந்த நெறியின் பூசை முறைகளை விளக்கவந்த பத்ததிகள் (வழிகள்) 18 ஆகும். அவை வருமாறு : (1) தூர்வாசம், (2) பைங்களம், (3) உக்ரஜோதி, (4) சுபேதம், (5) ஸ்ரீ கண் டம், (5) விஷ்ணுகண்டம், (7) வித்யாகண்டம், (8) ராம கண்டம், (9) ஞானசிவம், (10) ஞானசங்கரம், (11) சோம சம்பு, (12) பிரம்மசம்பு, (13) திரிலோசன சிவம், (14) அகோர சிவம், (15) பிராசாத சிவம், (16) இராமநாத சிவம், (17) ஈசான சிவம், (18) வருண சிவம். இவற்றுள் 11, 14 அச்சிடப்பட்டுள்ளன.

இக்கொள்கைக்குப் பயிலப்பட்டு வரும் நூல்கள் மெய் கண்ட சாத்திரம் என்னும் சைவ சித்தாந்த சாத்திரங்கள் 14 ஆகும். இந்நூல்களைப் பல மடங்கள் பல வகையாகப் பாதுகாத்துப் பரப்பிவந்தன. இந்த நூல்களைத்தவிர ஏனைய ஞானமிர்தம், தகளறு போதம், தத்துவ விளக்கம், தத்துவ ரத்னாகரம், தத்துவப் பிரகாசிகை, பண்டார சாத்திரம், ஞான சாரம், ஞான சாகரம், சதமணிக் கோவை முதலிய நூல்கள் தமிழில் உண்டு. வடமொழியில் அஷ்டப்ரகா ணம் என்ற எட்டு நூல்கள் கொண்ட தொகுப்பு நூல் உள்ளது. அகோர சிவாசாரியார் பத்ததி, சோமசம்பு

சிவாசாரியார் பத்ததி, நீலகண்ட சிவாசாரியார் பாடியம், திரிலோசன சிவாசாரியார் அரதத்த சிவாசாரியார் நூல்கள் முதலியன வடமொழியில் உள்ளன. ஆட்சியில் தமிழ்நாட்டில் தமிழ் நூல்களே வடமொழி நூல்களைவிடப் பெரிதும் பயிலப்பட்டு வருகின்றன. ஸைசவ சித்தாந்தக் கொள்கை இற்றைநாள் எடுப்பார் கைப்பிள்ளையாக மரபை ஒட்டிய விளக்கம் கேட்கமுடியாத நிலைமையில் தூர்ந்து போயிருக்கிறது. இதனைப் போற்றிக் காலத்திற்கு ஏற்றவாறு விளங்க வைத்தல் நம்மனோர்க்கு இன்றியமையாத நீங்காக் கடமையாக இருக்கிறது.

நிற்க, இந்த மெய்கண்ட சாத்திர நூல்களைச் சொல்லி வந்த படி முறைகளும், அதற்குரிய நூல்களும் பலவாம். திருவாவடுதுறையில் சைவ சித்தாந்தம் கற்கப்புகுவார் முதலில் அறிவதற்கு, வடமொழி நூலாகிய சர்வாத்ம சம்பு சிவாசாரியாரின் சித்தாந்தப் பிரகாசிகையினுடைய சிவஞான முனிவரின் மொழிபெயர்ப்பு நூலே முதலில் கற்பிக்கப்படுவது வழக்கம். இதனை அடுத்துத் திருவருட் பயன், சிவப்பிரகாசம், சிவஞான சித்தியார், சிவஞான போதம் என்று படிப்படியாகப் பயிலப்பட்டு வந்தது.

சித்தாந்த நூல்களைப் படிக்க நுழையும் இளைஞர்கட்குப் பெருந்துணையாய் இருப்பன சைவ சித்தாந்தக் கட்டளைகளாம். அவற்றை இந்நூற்றொகுதியில் காணலாம். இந்நூற்றொகுதியில் சேராத ஞானாமிர்தக் கட்டளை, தசகாறு போதக் கட்டளை, சுத்த சிவப்பிரகாசக் கட்டளை, திரிபதார்த்த சிந்தனை, மெய்கண்ட சாத்திரக் கட்டளை,* தத்துவானுபோகக் கட்டளை,† போன்ற கட்டளை நூல்களும், சைவ சித்தாந்தம், சைவ சித்தாந்தசாரம் போன்ற சிறு சாத்திர நூல்களும் உண்டு. செய்யுள் வடிவிலுள்ள

---

*சித்தாந்தம், மலர் - 15 ; பக்கம் - 337.

†சித்தாந்தம், மலர் - 11 ; பக்கம் - 201.

சிறு சாத்திர நூல்களை, ஒரு கோவையாகத் தொகுத்து வெளியிட்டால் அவை இறந்துபடாமல் பாதுகாக்க ஏது வாகும். சிறு நூல்கள் பாதுகாக்கப் படாவிடின் இறந்து படும் என்பது துணிபு. இக்கட்டளை நூல்களில் சில முதல் நூல்களைக் கற்பதற்குப் படிமுறையாக அமைந்துள்ளன. ஞானமிர்தம் கற்பதற்கு ஞானமிர்தக் கட்டளையும், துகளறு போதம் கற்பதற்குத் துகளறுபோதக் கட்டளையும் அமைந் திருப்பது சிந்தனைக்குரியது.

'கட்டளை' என்ற சொல் அளவு, உவமை, நிறை அறி கருவி (பிங்கலந்தை), அச்சு (அறநெறி-56), ஒன்றை ஒட்டி அமைக்கப்பட்ட உருவம் (பெருங் : 33 ; 113), உரைகல் (குறள், 986), விதி (சீவக. 2752), தரம் (பதிற்று : 81-17), முறைமை (தஞ்சை. கோ. 333), கட்டுப்பாடு, எல்லை, ஒழுங்கு (ஈடு உரை) என்ற பொருள்களில் வழங்கும். அஃது ஈண்டுச் சமயங்களின் மூலக் கொள்கைகளையும் தத்துவங் களையும் தொகுத்துணர்த்தும் அடிப்படைச் சிறு சிறு நூல் களுக்கும் பெயராயிற்று. கோயிலில் அமைக்கப்படும் அறங்களும் இப்பெயரால் வழங்குவது அறியற்பாலது. இப்படி அருமையாக இளைஞர்கட்குப் பயன்படக்கூடிய இச் சைவ சித்தாந்தக் கட்டளைத் தொகுதியை, இயன்ற வரை இதுவரை வெளிவந்துள்ள முன் பதிப்புக்களை ஒத்திட்டு வெளியிட்டுள்ளேன். குறைகள் இருப்பின் பொறுத்தருள வேண்டுகிறேன். அன்பர்கள் படித்துப் பயன்பெறவும், அவ்வாற்றால், சைவ சித்தாந்தம் மக்களிடையிற் பரவி விளங்கவும் இறையருள் துணை செய்வதாக.

திருச்சிற்றம்பலம் - கி. நாராயணசாமி நாயுடு

பதிப்பாசிரியன்,

சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜ முன்னாள் செயலாளன்.

சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை-4

களை ஆற்றுதல் வேண்டும் என இறையருளை நினைந்து வழுத்தி இன்புற்றனர்.

உண்மைப் பெரியார்! ஒழுக்கமிக்கார்!
உயர்ந்த குறிக்கோள் வாழ்க்கையினர்!
நண்ணி வார வழிபாடு
நாடு முழுதும் நடப்பித்தார்!
திண்மைச் சைவப் பெருந்தலைவர்!
சிறந்த சச்சி தானந்தர்,
அண்மை எழுபத் தைந்தகவை
அடைந்தார்! வாழி நீடூழி!

—முருகவேள்

## செய்திச் சுருக்கம்

நால்வர் திருவிழா: திருச்சிற்றம்பலம் ஸ்ரீ நடனபுரீசுவரர் ஆலயத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய திருநாளாகிய ஆடி சுவாதி (21-7-61) அன்று காந்தி வித்தியாலயத்தின் சார்பில் நால்வர் தினவிழா நடைபெற்றது. ஸ்ரீ நடனபுரீசுவரர், ஸ்ரீ சௌந்தர நாயகியம்மன், நால்வருக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்ந்தன. இறை வழிபாட்டோடு, திருவாசகம் மதுரை ஸ்ரீ வேங்கடராமையர் அவர்களுடைய பன்னிரு திருமுறைப் பாராயணம் நடைபெற்றது. மாலையில் பொது மக்களும், காந்தி வித்தியாலயப் பயிற்சிக் கலாசாலை மாணக்கர்களும், குழந்தைகளும் கலந்து கொண்டார்கள். தமிழாசிரியர் விழாச் சொற்பொழிவு செய்தார். திருமுறைப் பாராயணத்தோடு விழா நன்கு பூர்த்தி பெற்றது.

புரசைத் திருநெறிக் கழகம் 6-ம் திங்கள் வழிபாடு:— தொண்டை நன்னாட்டின்கண் விளங்கும் திருக்கோயில்கள் 32-ல், 15, 16, 17, 18-வது தலங்களாகிய திருவாலங்காடு, திருப்பாசூர், திருவெண்பாக்கம், திருக்கள்ளில் முதலிய தலங்கட்கு, 20-8-61 அன்று காலை 6 மணிக்கு, சென்னை, புரசை, வைக்கோற்காரத் தெருவிலுள்ள ஸ்ரீ வேம்படி விநாயகர் கோயிலிலிருந்து அன்பர்கள் புறப்பட்டு மேல்படி நான்கு தலங்களையும் வழிபட்டு இரவு 8-30 மணிக்குச் சென்னை திரும்ப ஏற்பாடு செய்யப்பட்டுளது. வழிபாட்டின்போது திரு. ஜி. வடிவேலாயுதம், எம்.ஏ., காஞ்சிபுரம் - வித்துவான் - திரு. வீ. திருஞானசம்பந்த முதலியார், திரு. ஜி. சம்பந்த முதலியார் முதலியவர்களால் சொற்பொழிவுகளும், இசைச் செல்வர் - திரு. கே. புண்ணியகோடி அவர்களால் அவ்வத்

தலங்களின் தலப்பதிகங்கள் - வழிபாட்டுப் பாடல்கள் முதலியன ஓதுதலும் நிகழும்.

மேல்படி கழகத்தின் 5-ம் திங்கள் வழிபாடு 16–7–61-ல் திருமாற்பேறு, திருவூறல் (தக்கோலம்), திருஇலம்பையங்கோட்டூர், திருவிற்கோலம் (கூவம்) ஆகிய தலங்களில் நடைபெற்றது. சமாஜ அங்கத்தவர்களும், புரசைத் திருநெறிக் கழக அன்பர்களும், பிற அன்பர்களும் வழிபாட்டில் கலந்து வழிபட்டும், சொற்பொழிவாற்றியும் சிறப்பித்தார்கள். திருவிற்கோலத்தில் திரு. தி. அப்பாதுரை முதலியார் அவர்கள் வந்திருந்த அன்பர்கட்குக் காலைச் சிற்றுண்டியும், தக்கோலம் - திரு. கே. வ. கோவிந்த முதலியார் அவர்கள் சிறந்த வரவேற்பும் பகல் உணவும் அளித்தமை பெரிதும் பாராட்டற்குரியது.

பிரிவாற்றாமை: மிகச் சிறந்த சைவ நலங்கள் பலவும் செறிந்திருந்த பெரியவரும்; நமது சமாஜத்தின் 51-ஆம் ஆண்டுவிழா, திருப்பெண்ணாகடத்தில் 1956-ஆம் ஆண்டிற் சிறப்புற நிகழ்ந்தபொழுது, அதன் வரவேற்புக் குழுத் தலைவராக அமைந்து பெருந்தொண்டு ஆற்றியவரும்; திருப்பெண்ணாகடத்தில் ஸ்ரீ மெய்கண்டார் பெருமான் திருக்கோயில் நன்கினிது அமையக் காரணராக விளங்கி அங்கு வழிபாடு முதலிய நிகழ்ச்சிகள் பலவும் சிறப்பாக நடைபெற்றுவரப் பெரிதும், ஊக்கம் கொண்டு உழைத்து வந்த பெருந்தகையாளரும்; சைவ சமய வளர்ச்சியில் அளவிலா ஆர்வம்கொண்டு உடல்தளர்ந்தும் உள்ளம் தளராத நிலையில் ஆக்கச் செயல்கள் பலவற்றிற்குத் திட்டமிட்டு வந்தவரும்; நடுநாட்டுச் சிவத்தல யாத்திரை செய்பவர்களுக்கெல்லாம் பலவகைகளிற் பேருதவியாளராகத் திகழ்ந்து வந்தவரும்; "மெய்கண்டார் வரலாறு" முதலிய நூல்களை எழுதியவரும்; சிறந்த சிவபூசா துரந்தரரும் ஆகிய விருத்தாசலம்-வக்கீல் - திரு. எஸ். அரங்கசாமிப் பிள்ளை அவர்கள், 17-7-61 திங்கட்கிழமையன்று, மண்ணுலக வாழ்வு நீத்து மறைவுற்றமை யறிந்து பெரிதும் வருந்துகின்றோம். அவர்தம் ஆருயிர் சிவபிரான் திருவடி நீழற்கண் அமர்ந்து வைகி, என்றும் இடையறா இன்பத்தில் திளைப்பதாக.

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.